உ

சிவ சிவ

தருமபுர ஆதீனம்
வேத, ஆகம பாடசாலைத்தலைமை ஆசிரியர்,
சிவாகம வித்துவான், சிவாகம ரத்னாகரம்,

**சிவஸ்ரீ சு. சுவாமிநாத சிவாசாரியார் அவர்கள்**
**அளித்த**

# சிறப்புரை

—x—

சிவபூசை: எல்லாக் காரியங்களை நிறைவு செய்வதாலும், ஆன்மாவிற்கு ஞானத்தையளிப்பதாலும் சிவபூசை எனப் பெயர் பெற்றது. அத்தகைய சிவபூசை செய்பவன் விஸ்த்தாரமான ராஜ்யத்தையும், அக்கினி காரியத்தினால் சம்பத்தையும், செபத்தினால் பாப நீக்கத்தையும், தியானத்தினால் ஞானத்தையும் அடைகிறான். மத்த யானைகளும் காற்றைப்போல் வேகமாக ஓடும் குதிரைகளும், தேவ வனிதைகளுக்கு ஒப்பான பெண்மணிகளும் எவருடைய இல்லத்திலிருக்கின்றனவோ அது முறையுடன் செய்யப்படும் சிவபூசையின் பயன் என்பது முதியோர் முதுமொழியாகும். ஆன்மார்க்க சிவபூசையால் அடைய முடியாதது யாதுமில்லை என்று சிவாகமங்கள் பறை சாற்றுகின்றன.

சமய, விசேடம் முதலிய தீட்சைகளைப் பெற்று, நல்லாசாரியரால் அளிக்கப்பட்ட இஷ்டலிங்கத்தில் அல்லது க்ஷணிக லிங்கத்தில் இறைவனை விதிப்படி அர்ச்சித்து இஷ்டசித்தியை யாவரும் பெறவேண்டும் என்று நினைத்து, சைவத் திருவாளர், திருமுறைக் கலைஞர், வித்துவான் திரு. தி பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் தனது சிவபூசையின் அனுபவத்தாலும், நல்ல ஆராய்ச்சி

யினும் மிகத்தெளிவான முறையில் ஆன்மார்த்த சிவ பூசா முறை என்ற இந்நூலை எழுதியுள்ளார்கள். இதற்கு முன் பல சிவபூசாமுறை நூல்கள் வெளிவந்திருப்பினும் இதில் நல்ல முறையில் சிவபூசை உயர்வு, தெளிவு அதன் வகை, பூசைக்குரிய அடையாளங்கள், ஆசௌசாதிகளில் சிவபூசை செய்யவேண்டிய முறை, சிவபூசை செய்யத் தவறினல் அதற்குரிய பிராயச்சித்தம், முத்திரா லக்ஷணம் முதலியவைகள் உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்குகின்றன என்பது போற்றத்தக்கது. இந் நூல் சிவபூசை செய்யும் ஒவ்வொருவருக்கும் மிகவும் பயன்படக் கூடியதாக விளங்குகிறது.

எத்தனையோ நூல்கள் இருப்பினும், தனது மணிவிழா மலராக இந்த ஆன்மார்த்த சிவபூசா முறை என்ற நூலை வெளியிட உளங்கொண்ட திருச்சிராப்பள்ளி மலைவாசல் பாத்திர வியாபாரம் சிவபூசைச் செல்வர் சைவத்திரு. A. P. G. முருகேசன் செட்டியார் அவர்களின் சிறந்த இப் பணி அவருடைய சிவபக்தியையும், அடியார்களிடம் கொண்ட பக்தியையும் வெளிப்படுத்துகிறது.

இந்நூலை எழுதிய உயர்திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்களுக்கும், இந்நூலை அச்சிட்டு உதவிய, திருச்சி மலைவாசல் பாத்திர வியாபாரம் A. P. அருணசலம் செட்டியார் சன்ஸ் அவர்களுக்கும் எல்லாம் வல்ல இறைவனின் திருவருளால் நோயின்மை, கல்வி, தனம், தான்யம் முதலிய பேறுகளுடன், நீண்ட ஆயுளும் உண்டாகவேண்டும் என்று நினைத்து வாழ்த்துகிறேன்.

மாயூரம்-தருமபுரம்,
11—2—70.

இங்ஙனம்,
சு. சுவாமிநாத சிவாசாரியார்.

உ
சிவசிவ

# முன்னுரை

—o—

எண்ணில் ஆகமம் இயம்பிய
இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை
எனவுரைத் தருள
அண்ண லார்தமை அருச்சனை
புரியஆ தரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாயின
பெருந்தவக் கொழுந்து.

— பெரியபுராணம்

## சைவ சமய மெய்யன்புடையீர்,

சிவபூசையின் பெருமையினை உணர்ந்த "வானிடத் தவரும் மண்மேல் வந்து அரன்தனை அருச்சிப்பர்" (சிவ ஞான சித்தியார்) ஆதலால், ஒவ்வொரு சைவ நன்மக்க ளும் உரிய காலத்தில் சமய தீட்சையினைப் பெற்றுச் சைவானுட்டானத்தைச் செய்து வருவதோடு விசேட தீட்சையினையும் பெற்று ஆன்மார்த்த சிவபூசையினைச் செய்து வரல் வேண்டும். இது சைவ நன்மக்களின் இன்றி யமையாத கடமைகள் பலவற்றுள் ஒன்றும். சிவபூசை ஒன்றே பிறவிப் பிணியினைப் போக்க வல்லது:

"பத்தி யாகிப் பணைத்தமெய் அன்பொடும்
நொச்சி யாயினும் கரந்தை யாயினும்
பச்சிலை யிட்டுப் பரவும் தொண்டர்
கருவிடைப் புகாமற் காத்தருள் புரியும்
திருவிடை மருத! திரிபு ராந்தக!"

என்பது திருவிடை மருதூர் மும்மணிக் கோவை. முன் செய்த தவப்பேறுடையார்க்கே சிவபூசை எய்தும் பேறு

உண்டாகும். ஆகவே, மானுடப் பிறவியின் பயனை அடையச் சிவபூசை புரிதல் வேண்டும்.

ஆன்மார்த்த சிவபூசாவிதிகள் சிவாகமங்களிலே விரிவாகக் கூறப் பெற்றுள்ளன. சிவாகமங்கள் ஆன்மாக்களின் பக்குவ பேதம் நோக்கிப் பலதிறப்பட்டனவாகும். அவற்றைச் சைவாசாரியர்கள் வகுத்து 18- பத்ததிகளாக வரைந்தனர். அவற்றுள் சோமசம்பு பத்ததியும், அகோர சிவர் பத்ததியும் ஆன்மார்த்த சிவபூசை முறைகளை மிகத் தெளிவுபடக் கூறுகின்றன. அப்பத்ததிகளையும், அப்பைய தீட்சதர் சிவார்ச்சனு தீபிகை, திருச்சி பச்சாம்பேட்டை சத்தியோஜாத சிவாசாரியார் சிவார்ச்சனு தீபிகை, சிவ பூசை அந்தாதி, சிவபூசை அகவல், நித்திய கன்ம நெறி முதலாய நூல்களையும், ஆன்ருேர் செய்து வந்த சிவபூசை அனுபவ முறைகளையும் ஆதரவாகக்கொண்டு யாவரும் ஐயம் திரிபுஇன்றி எளிதில் உணர்ந்து சிவபூசையினைச் செய்து சிவகடாட்சம் பெற "ஆன்மார்த்த சிவபூசா முறை" என்ற இந்நூல் மந்திரலோபம், கிரியா லோபம் (லோபம்-குறைவு) இன்றி எளிய நடையில் எழுதியதாகும்.

இந்நூலில் சூரிய பூசையினை அன்பர்கள் எளிதில் தெரிந்து செய்யும்படி சூரிய அஷ்டதள பத்மபடம் ஒன்று அமைத்து, அதில் வரிசை எண்களுடன் துவார தேவர் முதலியோர்களின் திருப்பெயர்களையும் இடங்களையும் காட்டியுள்ளேன். சிவபூசை செய்யுமுன் பூசைப்பொருள்களை அமைக்கும் இடங்களையும் துவார தேவர் முதலியோர்களைப் பூசிக்கும் இடங்களையும் குறிப்பிடும் படம் ஒன்றும் அமைத்துள்ளேன். சூரியபூசை சிவபூசைகளில் வரும் முத்திராலட்சணங்களைத் தெளிவுபட அமைக்கும் முறைகளையும் விளக்கியுள்ளேன். ஆக, இந்நூலில் யாவும் தெளிவுபட அமைத்துக் காட்டப்பட்டுள்ளன.

இந்நூல் திருச்சிராப்பள்ளி, மலைவாசல் பிரபல பாத்திர வியாபாரம், சிவபூசைச் செல்வர் சைவத்திரு A. P. G. முருகேசன் செட்டியார் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு மணிவிழா நினைவு மலராகச் சௌமிய ஆண்டு மாசித் திங்கள் 5-ஆம் நாள் (16—2—1970) திங்கட்கிழமை மிருகசீரிட நன்னாளில் திருவானைக்கா சிவத்தலத்தின்கண் வெளியிடப்பெறுகிறது.

எனது பேரன்பிற்குரியவராகிய சைவத்திரு A. P. G. முருகேசன் செட்டியார் அவர்கள் பரம்பரைச் சைவ ஒழுக்க முடையவர்; நாளும் சைவானுட்டானம், இட்ட லிங்க பூசை (உடையவர் பூசை) செய்து வருபவர்; திருமுறை ஓதுதல், சிவாலய தரிசனம், சிவபுண்ணியச்செயல்கள் முதலியன செய்தும் மகிழ்பவர்; வாய்மை, அன்பு, அருள், ஈகை முதலிய அருங்குணங்கள் அமையப்பெற்றவர்; செயல்களை நன்முறையில் முடிக்கவல்ல திறமை வாய்ந்தவர்; பற்பல சிவத்தலங்களில் அறக்கட்டளை நியமித்துப் பரிபாலிக்கும் தரும சீலர். இவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு மணிவிழா நினைவு மலராக வெளிவரும் இந்நூல் திருச்சிராப்பள்ளி மலைவாசல் பிரபல பாத்திர வியாபாரம் A. P, அருணாசலம் செட்டியார் சன்ஸ் அவர்களால் அன்புடன் வெளியிடப்படுகின்றது. அவர்கட்கு என் நன்றி உரியதாகும்.

இந்நூலுக்குச் சிறப்புரை வழங்கிய தருமையாதீனம் வே. ஆ. பாடசாலைத் தலைமையாசிரியர் சிவாகம வித்துவான், சிவாகம ரத்னாகரம் சிவஸ்ரீ சு. சுவாமிநாத சிவாசாரியார் அவர்களுக்கும் எனது வணக்கமும் நன்றியும் உரியனவாகும்.

இந்நூல் சைவ உலகத்தில் ஆன்மார்த்த சிவபூசை புரியும் மெய்யன்பர்களுக்கு ஒருவழிகாட்டியாக விளங்கும்

என்பது எனது துணிபு. சைவ அன்பர்கள் இந்நூலைப் பெற்று நன்கு உணர்ந்து சிவாகம முறைப்படி ஆன்மார்த்த சிவபூசையினைச் செய்து பெரும் பயன் அடையுமாறு வேண்டுகிறேன்.

மழைவ ழங்குக; மன்னவன் ஓங்குக;
பிழையில் பல்லவளம் எங்கும் பெருகுக;
தழைக அஞ்செழுத்(து) ஓசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

—கோயிற்புராணம்

அருள் நந்தி நிலையம்
மலைக்கோட்டை
திருச்சிராப்பள்ளி-2
16—2—70

இங்ஙனம்,

**தி. பட்டுச்சாமி ஓதுவார்**

உ
சிவமயம்

# பதிப்புரை

—o—

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே.

—தேவாரம்-ஞானசம்பந்தர்

"ஆன்மார்த்த சிவபூசா முறை" என்ற இந்நூல் சைவ அன்பர்கள் நாளும் சிவபூசை செய்து தம் பிறவிப் பயனை எய்துவதற்கு ஏற்ற வழிகாட்டியாக அமைந்துள்ளது. இந்நூல் திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டை திருமுறைக்கலைஞர், வித்துவான் உயர்திரு, தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் பல சைவசமய நூல்களை ஆராய்ந்து செவ்விய முறையில் தொகுத்துள்ளார்கள்.

இத்தகைய அரிய நூலை, எங்கள் அன்பிற்குரியவரும், சிவ பூசை செல்வரும் ஆகிய சைவத்திரு. A. P. G. முருகேசன் செட்டியார் அவர்கள் மணிவிழா நினைவு மலராக, எங்களால் வெளியிடப்பெறுகின்றது.

இந்நூலைச் செவ்விய முறையில் ஆக்கித் தந்த வித்துவான், திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கட்கு எங்கள் நன்றி. இந்நூல் சைவ அன்பர்கட்குப் பெரிதும் பயன்படுவதாக. மணிவிழாச் செல்வர் மாண்புற்று விளங்குவாராக

மலைவாசல்,
திருச்சிராப்பள்ளி-2.
16—2—1970

இங்ஙனம்,
A. P. அருணசலம் செட்டியார் சன்ஸ்,
பாத்திர வியாபாரம்.

# உள்ளுறை

உ

சிவ சிவ

ஆன்மார்த்த

# சிவபூசாமுறை

(சிவாகம விதிப்படி)

---

துதி

மறப்புற்று இவ்வழி மன்னிநின் ருலும்
சிறப்பொடு பூநீர் திருந்தமுன் ஏந்தி
மறப்பின்றி உன்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே.

— திருமந்திரம்.

---

## 1. பொதுப் பகுதி

---

### 1. சிவபூசையின் உயர்வு

"மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயத்து ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்ருே" என்பது சிவஞான சித்தியார். "ஊன் அடைந்த உடம்பின் பிறவியே......மாநடஞ்செய் வரதர் பொற்ருள் தொழ" என்பது பெரிய புராணம்.

முற்பிறவிகளில் செய்த சிவபுண்ணிய மிகுதியால் சைவ சமய மரபில் தோன்றிய ஒவ்வொரு சைவ நன்மக்களும் உரிய காலத்தே சிவ தீட்சை (சமய தீட்சை)யினைப் பெற்றுச் சைவானுட்டானத்தை அனுட்டித்துக்கொண்டு வருவதுடன் விசேட தீட்சையும் பெற்றுப் பூக் கைக் கொண்டு அரன் பொன்னடி போற்றுதலும் வேண்டும். "எண்ணி லாகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" (பெரிய புராணம்) ஆகலின், சிவ பூசை ஒன்றே பிறவிப் பிணியை ஒழித்து முத்திப் பேற்றை ஒருவர்க்கு அளிக்க வல்லது; ஒவ்வொரு சைவ மக்களுக்

கும் சிவபூசை மிக இன்றியமையாத முத்திச் செல்வம் ஆகும். ''யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை''என்று திருமூலர் கூறுகின்றார்.

சிவனன்றி வேறு தெய்வமில்லை என்றும், சிவபதமின்றி வேறு பதம் இல்லை என்றும், சிவபுண்ணியமன்றி வேறு புண்ணியம் இல்லை என்றும், சிவபூசையன்றி வேறு பூசை இல்லை என்றும் சங்கிர சங்கிதை கூறுகிறது ; ஆகவே, சிவபூசையே மிக உயர்ந்த பூசை ஆகும்.

கொலை, களவு, கள், காமம், பொய் இவற்றை விடுத்து அன்பு, அருள், வாய்மை, ஈகை முதலியன உடையவராய், விபூதி உருத்திராட்சம் தரித்தவராய், சமய விசேட தீட்சை பெற்றவராய், அனுட்டானம் (சைவசந்தி), பஞ்சாட்சர செபம், சிவத்தியானம், சிவாலயச் சேவை, குரு பக்தி முதலியன உடையவராய் உள்ள அன்பர்களே சிவபூசை செய்ய உரியவர்கள் ஆவர்.

## 2. சிவபூசையின் வகை

சிவபூசை பரார்த்த பூசை, ஆன்மார்த்த பூசை என இரு வகைப்படும். பரார்த்த பூசை என்பது சிவாலயங்களில் தனக்கும் பிறர்க்கும் அருள் பாலிக்கும் பொருட்டுச் சிவ லிங்கப் பெருமானைப் பூசிப்பது. ஆன்மார்த்த பூசை என்பது தனக்கு மட்டும் அருள் பெறுதற்குச் சிவலிங்கப் பெருமானை ஆயுள் உள்ளவரையும் பூசிப்பது.

ஆன்மார்த்த சிவபூசை சுத்த பூசை, கேவல பூசை, மிச்சிர பூசை என மூன்றுவகைப்படும். சிவலிங்கம் ஒன்றை மட்டும் வைத்துப் பூசிப்பது சுத்த பூசையாம். சிவலிங்கம், உமாதேவி, கணபதி, முருகன், இடப தேவர் என்னும் ஐவரையும் வைத்துப் பூசிப்பது கேவல பூசையாம். சூரியன், கணபதி, முருகன், இடப தேவர், சிவலிங்கம், உமாதேவி, சண்டேசுவரர் என்னும் எழுவரையும் வைத்துப் பூசிப்பது மிச்சிர பூசையாம்.

இந்நூலில் மிச்சிர சிவபூசை முறையினையே சிவாகமப் படி விளக்கமாகக் கூறப் பெற்றுள்ளது.

இந்த ஆன்மார்த்த சிவபூசை இட்டலிங்க பூசை எனவும், க்ஷணிகலிங்க பூசை எனவும் இருவகைப்படும். இட்டலிங்க பூசை-இது, பாணம் அல்லது மரகதம், படிகம், கல் முதலியவற்ருல் ஆகிய சிவலிங்கம் ஒன்றை ஆசாரியனிடம் விரும்பிப் பெற்று ஆயுள் உள்ள வரையும் வைத்துக் கொண்டு நாடோறும் பூசித்தலாம். க்ஷணிகலிங்க பூசை—இது, புற்று மண், ஆற்று மணல், சந்தனம் முதலியவற்ருல் அமைத்த சிவலிங்கம் ஒன்றை ஆசாரியனிடம் விரும்பிப் பெற்று ஆயுள் உள்ள வரையும் நாடோறும் பூசித்த பின்னர் கைவிடுதலாம்.

இட்டலிங்கம் பெற்றுப் பூசிக்க இயலாதவர் க்ஷணிகலிங்கம் பெற்றுப் பூசை செய்யலாம். அது மிக எளிது. ஆயின் பயன் ஒன்றே. சிவபூசையிலே—இலிங்க சுத்தியில் இட்ட லிங்கத்திற்கு அபிஷேகம் உண்டு; க்ஷணிக லிங்கத்திற்கு அபிஷேகம் இல்லை. ஆனல் இரண்டிற்கும் பாவனுபிஷேகம் உண்டு. பூசை முறைகள் யாவும் ஒன்றே. இட்டலிங்க பூசைக்கு அவசியம் அன்ன நைவேத்தியம் செய்தல் வேண்டும். க்ஷணிகலிங்க பூசைக்குக் கையில் கிடைத்தனவற்றை வைத்து நைவேத்தியம் செய்து பூசிக்கலாம்.

க்ஷணிகலிங்கம் புற்று மண், ஆற்று மணல், பச்சை அரிசி, அன்னம் (சோறு), கோமயம் (பசுச் சாணம்), வெண்ணெய், உருத்திராட்சம், விபூதி, சந்தனம், புஷ்பமாலை கூர்ச்சம், சர்க்கரை (நல்ல வெல்லம்) மாவு, பழம் (கனி), தளிர் (மா முதலிய தளிர்), தண்ணீர் எனப் பதினாறு வகை ஆகும் என்று காரணுகமம் முதலிய சிவாகமங்கள் கூறும்.

புற்று மண் இலிங்கம் மோட்சத்தையும், ஆற்று மணல் இலிங்கம் பூமி லாபத்தையும், பச்சையரிசி இலிங்கம் திரவிய லாபத்தையும், அன்ன இலிங்கம் அன்ன விருத்தியையும், கோமய இலிங்கம் வியாதி இன்மையையும், வெண்ணெய் இலிங்கம் மன மகிழ்ச்சியையும், உருத்திராட்ச இலிங்கம் ஞானவிருத்தியையும், விபூதி இலிங்கம் சகல செல்வத்தையும், சந்தன இலிங்கம் சகல இன்பத்தையும்,

புஷ்ப மாலை இலிங்கம் ஆயுள் விருத்தியையும், கூர்ச்ச இலிங்கம் முத்திச் செல்வத்தையும், சர்க்கரை இலிங்கம் விரும்பிய இன்பங்களையும், மாவு இலிங்கம் உடல் வலிமையையும், பழ இலிங்கம் சுகத்தையும், தளிர் இலிங்கம் நல்ல குணத்தையும், தண்ணீர் இலிங்கம் சகல மேன்மையையும் அளிக்கும் என்று அஞ்சுமான் ஆகமம் கூறுகிறது.

## 3. பூசைசெய்யும் இடம் அமரும் திசை முதலியன

மலை, வனம் (சோலை), நந்தவனம், ஆற்றங்கரை, புண்ணிய தீர்த்தக்கரை (திருக்குளக்கரை), சிவாலயம். சைவ மடாலயம், வீடு முதலியன சிவபூசை செய்வதற்கு உரிய இடங்களாம். இங்குக் கூறிய ஏதேனும் ஓரிடத்தைப் பூசைக்கு ஏற்ற இடமாக வகுத்துக்கொள்ளவேண்டும்.

சிவபூசையினைக் கிழக்கு நோக்கியேனும், வடக்கு நோக்கியேனும் இருந்து செய்யலாம். வடக்கு நோக்கி இருந்து பூசிக்கின் மிகச் சிறப்பாம். மற்றைய தெற்கு, மேற்கு நோக்கி இருந்து பூசை செய்யலாகாது.

பூசை புரியுங்காலத்தில் பிறருடன் வார்த்தையாடாமல் மௌனமாகச் சிவசிந்தனையோடு இருந்து பூசை புரிதல் சிறப்பாம். பூசை முடிவில் மௌனத்தை விடல் வேண்டும்.

மரப்பலகையின்மேல் விரிக்கப்பெற்ற வெள்ளை வஸ்திரம் அல்லது வெள்ளைக் கம்பளம், தருப்பை இவற்றில் ஏதேனும் ஒன்றில் சுகமும் திடனும் எவ்வாறு இருக்கின் எய்துமோ அவ்வாறு அமர்ந்திருந்து பூசை செய்க.

## 4. வஸ்திரம்

ஈர வஸ்திரம், ஈரக் கௌபீனம் தரித்துக்கொண்டு பூசை முதலியன செய்யலாகா. துவைத்து உலர்ந்த சுத்தமான இரு வஸ்திரமும் கௌபீனமும் அணிந்தே பூசை புரிதல் வேண்டும். ஒற்றை ஆடை தரித்துக்கொண்டேனும் அல்லது கௌபீனம் மட்டும் தரித்துக்கொண்டேனும் ஒரு கருமமும் செய்யலாகாது. கௌபீனம் தரியாது செய்யும் எக்கருமமும் பயன்படாது.

ஈரவஸ்திரம் முதலியன அணியநேரின் ஓம் கம் கஷோல் காய வௌஷட் என்னும் சூரிய மந்திரத்தினுல் ஈர வஸ்திரத்தை ஏழுமுறை அபிமந்திரித்து உதறி உலர்ந்ததாகப் பாவித்து அணியின் குற்றமில்லை என்க.

பூசா காலத்தில் வெண்பட்டு, நார்மடி முதலியவைவ தரித்தல் விசேடமாம்.

## 5. புஷ்பம்—தூபம்—தீபம்

தனிப்பட்டவரின் நந்தவனம், தனக்குச் சொந்தமான நந்தவனம் இவற்றில் ஏதேனும் ஒன்றில் அல்லது பொதுவிடங்களில் உண்டான பத்திர புஷ்பங்களில் அன்று எடுத்துள்ள பத்திர புஷ்பங்களே பூசைக்கு மிக உரியனவாம். சிவாலயத்துள் தோன்றிய பத்திர புஷ்பங்கள் சிவபூசைக்கு உரியன அல்ல. அன்றியும் சிவ தீட்சை இல்லாதவர், ஆசௌசம் (தீட்டு) உடையவர், ஸ்நானம் செய்யாதவர் முதலியோர் எடுத்த பத்திர புஷ்பங்கள் பூசைக்கு ஆகா.

கிளுவை, வெண்நொச்சி, பன்னீர் இலை, நுணா இலை முதலிய பத்திரங்களைக் கிள்ளி அருச்சிக்கும்போது இடக்கையினுல் பத்திரத்தின் மேல்பாகத்தைப் பற்றி, வலக்கை அணிவிரலாலும் பெருவிரலாலும் யானைக்கண் அளவு கிள்ளி அருச்சித்தல் முறை. இந்த அளவுக்குக் குறையினும் கூடினும் குற்றமாம். பத்திரம் கிள்ளி அருச்சிக்கும்போது கிள்ளும் ஒலி உண்டாகின் சிறப்பு என்பர்.

குங்கிலியம், வில்வக் கட்டைப்பொடி, சந்தனக் கட்டைப் பொடி முதலியன கலந்து இடிக்கப்பெற்ற சாம்பிராணி கொண்டு தூபம் இடுவது மிக உயர்ந்ததாம்.

பசு நெய் அல்லது இலுப்பை நெய் முதலியவற்றுடன் ஏழு இழைகளாலாகிய தாமரை நூல் அல்லது பருத்தி நூல் என்பவற்றுள் ஒன்றைச் சேர்த்துத் தீபம் இடின் மிக மேன்மையாம். (தீபத்திற்கு எண்ணெய், கடலை நெய், தேங்காய் நெய் முதலியனவும் கொள்ளலாம்.)

## 6. சிவச் சின்னங்கள்

விபூதி, உருத்திராட்சம் சிவபூசைக்கு இன்றியமையாத சிவச் சின்னங்களாம். கண்டமாலை, சிரமாலை, செபமாலை அவசியம் சிவபூசையின்போது தரித்துக்கொள்ள வேண்டும். சிவச் சின்னங்கள் அணியாமல் சிவபூசை செய்பவர் சிவ பூசா பலனை அடையார்.

## 7. ஆசௌச காலங்களில் பூசிக்கும் முறை

சிவபூசை புரிபவர், சனனாசௌசம் (பிறப்புத்தீட்டு), மரணாசௌசம் ( இறப்புத்தீட்டு ) இவற்றில் ஸ்நானம் செய்து ஈரவஸ்திரத்தைச் சூரிய மந்திரத்தால் ஏழு முறை அபிமந்திரித்து உலர்ந்ததாகப் பாவித்துத் தரித்துக் கொண்டு, தீட்டு நீங்கும் வரை நாடோறும் அனுட்டானமும், சிவபூசையும் செய்துவரல் வேண்டும். தனக்குத் தீட்டு என்று கருதி ஒருபோதும் சிவபூசையினைக் கைவிடலாகாது. பூசையைக் கைவிடின் குற்றமாம். ஸ்நானம் செய்தது முதல் பூசை முடியும் வரையும் தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாததுபோல அவரைத் தீட்டுப் பற்ருது; அவர் பரிசுத்தர் எனச் சிவாகமம் கூறும்.

மரணாசௌசத்தில் சிவபூசை செய்யத் திடசித்தம் இல்லாதவர் தீட்டு நீங்கும் வரையும் தம்முடைய ஆசாரியரைக் கொண்டேனும், அல்லது தம்மோடு ஒத்த தீட்சை பெற்றுப் பூசை புரியும் அன்பரைக் கொண்டேனும் தம்முடைய சிவபூசையினைப் பூசிப்பித்து அப்பூசை முடிவிலே தாம் சற்றுத் தூரத்தில்நின்று புஷ் பாஞ்சலித் திரயம் செய்து நமஸ்காரம் பண்ணுதல் வேண்டும். அப்போது, தான் பூசை செய்த பயனை அடைவர்.

வியாதி முதலிய காரணங்களால் சிவ பூசை செய்ய இயலாமற் போகுமானுல் தம்மோடு ஒத்த தீட்சை முதலியன பெற்றவரிடம் தம் பூசையை அளித்துப் பூசை செய்வித்துத் தாம் அந்தரியாகம் செய்தல் வேண்டும்.

சிவபூசையினைப் பூசிக்கத் தம் அன்பரிடம் பெற்றவர், தம்முடைய இலிங்கத்தோடு அன்பர் கொடுத்த இலிங்கத்

தையும் வேறொரு இலிங்கத்தையும் கூட்டி அம்மூன்று இலிங்கத்தையும் பூசித்தல் முறையாம்.

ஒரு இலிங்கம், மூன்று இலிங்கம், ஐந்து இலிங்கம், ஏழு இலிங்கம், ஒன்பது இலிங்கம் வைத்துப் பூசிக்கலாம். இரண்டு, நான்கு, ஆறு, எட்டு ஆகிய இலிங்கங்கள் வைத்துப் பூசிக்கலாகா.

## 8. சிவபூசை தவறின் பரிகாரமும் பிறவும்

வியாதி முதலிய காரணங்களால் ஒருநாள் ஆன்மார்த்த சிவபூசை செய்யத் தவறிவிடின் அகோர மந்திரத்தை ஆயிரம் உருச் செபித்துவிட்டுப் பின்பு பூசை செய்யின் குற்றமில்லை. ஒருநாள் முதல் பத்துநாள் வரை பூசை செய்யத் தவறின் அகோர மந்திரத்தை நாள் ஒன்றுக்கு மூவாயிரம் மூவாயிரம் ஏற்றி ஏற்றிச் செபித்தல் வேண்டும். பத்துநாள் முதல் பதினைந்து நாள்வரை பூசை செய்யத் தவறின் அகோர மந்திரத்தை நாடோறும் முப்பதினுயிரம் முப்பதினுயிரம் ஏற்றி ஏற்றிச் செபித்தல் வேண்டும். அதற்குமேல் பூசை தவறின் ஆசாரியரைக்கொண்டு பரி காரம் செய்து, பின்னர் பூசையைச் செய்க எனச் சிவதரு மோத்திரம் என்னும் உபாகமம் கூறுகிறது.

ஆன்மார்த்த சிவபூசை செய்பவர், தம் சிவலிங்கம் (இட்ட லிங்கம்) களவினுல் அல்லது பிறவற்றினுல் காணுத விடத்து நாடோறும் அந்தரியாக பூசையை (அகப் பூசையை) மட்டும் செய்து பால், பழம் முதலிய உண்டு நாற்பது நாள் எதிர்பார்த்தல் வேண்டும். அதற்குள் சிவ லிங்கம் வாராதொழியின், வேறொரு சிவலிங்கத்தை ஆசா ரியன்மூலம் பெற்றுப் பூசித்தல் வேண்டும். பின்னர் காணுத சிவலிங்கம் கிடைத்ததாயின் அதனையும் விடாது, அத ேனுடு வேறொரு சிவலிங்கத்தையும் சேர்த்து மூன்று சிவ லிங்கமாகப் பூசித்தல் வேண்டும்.

சிவபூசை புரியும்போது சிவலிங்கம் நகர்ந்தாலும், சாய்ந்தாலும், உருண்டாலும், கை தவறிக் கீழே விழுந் தாலும், அருக்கிய வட்டகை சாய்ந்தாலும், உடைந்தா

லும், செபமாலை செபிக்கும்போது சிக்கினுலும், கீழே தவறி விழுந்தாலும் குற்றமாம். இவற்றிலேதேனும் ஒன்றுநேரின் அகோர மந்திரத்தை நூறு உருச் செபித்தல் வேண்டும்.

சமயம் விசேடம் முதலாய தீட்சைகளைப் பெற்ற பெண்கள் வீட்டிற்கு விலக்காய் உள்ள மூன்று நாட்களும் பிறர் தண்ணீர் தர ஸ்நானம் பண்ணி அந்தரியாகம் (அகப் பூசை) செய்து மனத்தில் ஐந்தெழுத்தை நினைத்துக் கொண்டு வந்து, நான்காம் நாள் ஸ்நானம் செய்து பஞ்ச கவ்வியம் அல்லது பால் அருந்தி, மீட்டும் ஸ்நானம் செய்து விபூதி அணிந்து சங்கிதா மந்திரத்தைப் பத்துத் தரமும் அகோர மந்திரத்தை இருபத்தோரு தரமும் செபித்துவிட்டு அனுட்டானம், சிவபூசை முதலியன செய்தல் முறையாம். நான்காம் நாள் ஸ்நானம் செய்யத் தகுதி இல்லாவிடின் ஐந்தாம் நாள் ஸ்நானம் செய்து அனுட்டானம் சிவபூசை முதலியன செய்யலாம்.

பெண்கள் பூப்பினுல் வீட்டு விலக்காய் உள்ள நாட் களில் ஐந்தெழுத்தை நினைத்தலே போதும்; குற்றம் ஒன்றும் இல்லை எனச் சில நூல் கூறும். சிவபூசையினைக் கைக்கொண்ட பெண்கள் தாம் பிரசவித்த சூதக காலத்து, தீட்சையில் தம்மோடு ஒத்தவரைக் கொண்டு பூசை செய் வித்தல் வேண்டும்.

சிவபூசை செய்யும்போது இடையில் தனக்கு மரணு சௌசம் நேர்ந்தாலும், அல்லது எதிர் வீடு அயல் வீடுகளி லேனும் அவ்வீதியில் ஐம்பது முழத்துக்குள் உள்ள வீடு களிலேனும் சவம் கிடக்க நேர்ந்தாலும் முடிக்கவேண்டிய குறை பூசையை மந்திரமின்றி முடித்துப் பூர்த்தி செய்தல் வேண்டும் என ஆசௌசதீபிகை கூறுகிறது.

சிவபூசை செய்யுமுன், தான் இருக்கும் வீதியில் அல்லது அருகில் சவம் கிடக்கின் அதனை எடுத்த பிறகே பூசையாதிகளைச் செய்தல் வேண்டும். அயல் வீதியில் சவம் கிடக்கின் குற்றம் இல்லை. சிறு கிராமமாக இருந் தால் சவம் எடுத்த பிறகே பூசையாவும் செய்தல் முறை எனச் சிவாகம நூல் கூறும்.

சமயம் விசேடம் முதலிய தீட்சைகளைப் பெற்றுச் சிவ பூசை புரிபவர் இறந்துவிட்டால் அவர்பெற்ற தீட்சைக்குத் தக்கவாறு அந்தியேட்டி செய்வித்து அவரைச் சிவபதத்தில் சேர்ப்பித்த பின், அவர் பூசித்த உடையவரை (சிவலிங்கத்தை) அவரது ஆசாரியனிடத்திலே சேர்ப்பித்தல் வேண்டும். அல்லது ஆழமான நீர்நிலையில் கொண்டு போய் விட்டுவிடுதல் வேண்டும். க்ஷணிகலிங்க பூசை செய்பவர் பூசை முடிவில் க்ஷணிகலிங்கத்தை விசர்ச்சனம் செய்து விடுவதால் இதற்கு அந் நியமம் இல்லை என்பர்.

## 9. சிவபூசையில் கைக்கொள்வன

மந்திரம், கிரியை, பாவனை என்ற மூன்றையும் அனுட்டானம், சிவபூசை முதலியவற்றில் கைக்கொள்ள வேண்டும். இம் மூன்றும் மனம் வாக்கு காயங்களால் செய்யப் பெறுவன. பாவனை இன்றிச் சொல்லப்பெறும் மந்திரங்களும், செய்யப்பெறும் கிரியைகளும் குறித்த பயனை அளியா. ஆகவே, ஒவ்வொரு கிரியைகளில் பாவனையோடு மந்திரம் கூறுதல் வேண்டும்.

பாவனை மனத்தால் கருதிச் செய்யப்பெறுவது. மந்திரமும் கிரியையும் கருத்தைத் தெரிவிப்பன. கிரியை தூலமாகவும், பாவனை சூக்குமமாகவும், மந்திரம் அதி சூக்குமமாகவும் பயனை அளிப்பன.

மந்திரம் என்பது தன்னை நினைப்பவரைப் பாதுகாப்பது. எந்த மந்திரங்களும் முதலில் ஓம் என்ற பிரணவமும், இறுதியில் நம:, சுவாஹா, சுவதா, வௌஷட், வஷட், பட், ஹூம் என்ற ஏழினுள் ஒன்றும் பெற்று நிற்கும். இந்த ஏழும் சப்தகோடி மகா மந்திரம் (கோடி-இறுதி), எனப்பெயர் பெறும்.

நம :- இஃது அழைத்தல், ஐசுவரியங்களை அளித்தல். சுவாஹா:- தேவதைகளைத் திருப்தி செய்தல். சுவதா :- இது தைரியத்தையும் வசீகரத்தையும் தருதல். வௌஷட் :- இது தேவதைகளை இழுத்தல். வஷட் :- இது தேவதைகளை வசம் செய்தல். பட் :- இது விக்கினங்களை நீக்குதல். ஹூம்:- இது சீவராசிகளை ஒடுக்குதல். (ஹூம்பட் -இது விரைந்து செயலை முடித்தல்.)

மந்திரங்களுக்கு இடையிலே உள்ள பீசங்களில் குறிலாகவுள்ள ஹம், ஹூம் என்னும் பீச மந்திரங்கள் பாவங்களைப் போக்கும். நெடிலாகவுள்ள ஹாம், ஹைம், ஹௌம் என்னும் பீச மந்திரங்கள் வீடுபேற்றை அளிக்கும்.

சிவபூசையில் சாமானியார்க்கியம், விசேடார்க்கியம் (சிவார்க்கியம்), சுவாகதார்க்கியம், நிரோதார்க்கியம், பராங்முகார்க்கியம், பாத்தியம் ஆசமனம் எனப் பலவகை உண்டு. சாமானியார்க்கியம் தனித்த அருக்கியம் ஆகும். மற்றைய அருக்கியம் முதலியவற்றைத் தனித்தனியே வட்டகைப் பாத்திரத்தில் அமைத்துப் பூசையில் பயன்படுத்தல் சிறப்பாகும். தனித்தனி அருக்கியம் வைக்க இயலாதவர் விசேடார்க்கியத்தினுலேயே மற்றைய அருக்கியாதிகள் பெயர்களைச் சொல்லி அளிக்கலாம் என்று சிவாகமம் கூறும்.

அருக்கியாதிகளை வலக்கைப் பெருவிரல் அணி விரல் நடுவிரல் மூன்றையும் சேர்த்து, சுட்டு விரல், சிறு விரல்களை நீட்டிப் பிடித்தலாகிய மிருகமுத்திரையினுல் கொடுத்தல் வேண்டும். இதற்கு மாருக ஐந்து விரல்களினுலேனும், பிற விரல்களினுலேனும் அருக்கியம் கொடுக்கின் அந்த நீர் இரத்தத்திற்கு ஒப்பாம் எனச் சிவாகமம் கூறும்.

## 10. சிவபூசையின் சிறப்பு

அன்போடு உள்ளம் நெக்கு நெக்கு உருகப் பூசிக்கும் சிவ பூசை, பிறவிப் பிணி என்ற வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழல் பரப்பும் சோலை ஆகும். சிவ பூசை செய்தபின்னரே எச்செயல்களையும் செய்தல் வேண்டும். சிவ பூசை செய்யும் முன்னே உண்டி முதலியன புசித்தல் ஆகா. "பூசையிலாதான் உண்டி புழுப் பிணம் புலையன் கட்டம்" என்று விருத்தாசல புராணம் கூறுகிறது.

# II. சூரிய பூசைப் பகுதி

## 1. பூசைத் தொடக்கம்

ஆறு, குளம், வாய்க்கால், கிணறு, முதலியவற்றுள் ஏதேனும் ஒன்றில் சிரஸ்நானம் செய்து ஈரம் துவட்டி, துவைத்து உலர்ந்த வஸ்திரமேனும் வெண்பட்டேனும் அணிந்து உத்தூளனமாக விபூதியும், உருத்திராட்சமும் தரித்துக்கொண்டு சைவானுட்டானம் (சைவ சந்தி) முடித்து,

அதன்பின்பு, சுத்தி செய்த பூசைப் பாத்திரங்களையும், சந்தனக் கல்லையும், சந்தனக் கட்டையையும்,

ஓம் ஹ: அஸ்த்ராயப்பட் என்று தண்ணீர் ஊற்றிக் கழுவி எடுத்துக்கொண்டு,

சிவபூசைக்குரிய சகல பொருள்களுடன், மூன்று முழம் அல்லது ஒன்றறை முழ நீளத்தில் சதுரமாகக் கோமய (பசுச்சாண)த்தால் மெழுகிய சுத்தமான பூசா மண்டபத்தை (இடத்தை) அடைந்து, வடக்கு நோக்கி ஆசனத்தில் உட்கார்ந்து,

தன்னைச் சுற்றிலும் அஸ்த்ர மந்திர மயமான கூண்டு இருப்பதாகவும் அதன் மத்தியில் தான் இருப்பதாகவும் நினைத்துப் பிருதிவி தத்துவம் முதல் மாயை தத்துவம் ஈறுக உள்ள முப்பத்தோரு தத்துவங்களையும் படிப்படியாக மனத்தால் கடந்ததாக எண்ணிச் சிவதத்துவமான சுத்த வித்தியா தத்துவ மயமான பூசாத்தானத்தைச் சென்றடைந்ததாகப் பாவிக்க. அதன் பின்பு,

## 2. பூசை இடச்சுத்தி

ஓம் ஹ: அஸ்த்ராய பட் என்று பூசை செய்யும் பூசாத்தானத்தைத் தண்ணீரினுல் தெளித்து,

ஓம் ஹைம் கவசாய நம: என்று வலக் கையினுல் மெல்ல பூசா இடத்தைத் தடவித் தேய்த்துச் சுத்தி செய்து, கையலம்பி,

ஓம் ஹ : அஸ்த்ராய நம: என்று பூசை புரியும் இடத்தின் நடுவிலும் கிழக்கு முதலிய எட்டுத் திசைகளிலும், மறுபடி நடுவிலும் ஒவ்வொரு பத்திரம் கிள்ளி வைக்கவும்.

## 3. பூசை உபகரணங்களை அமைத்தல்

சிவபூசை செய்யும் இடத்தின் நடுவே சிவலிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்யும் பீடத்தையும், அதன் மேல் நனைத்துப் பிழிந்த சிறு பரிவட்டத்தை (ரிஷப வடிவம் எழுதிய சிறு பரிவட்டத்தை) விரித்து வைத்துப் பீடத்திற்குக் கிழக்கே ஒரு பத்திரத்தின் மேல் திருமஞ்சன நீர் நிறைந்த பாத்திரத்தையும், பீடத்திற்குத் தெற்கே ஒரு பத்திரத்தின்மேல் அபிஷேக கலசத்தையும், அதற்கு மேற்பாகத்தில் வரிசையாக ஒவ்வொரு பத்திரத்தின் மேல் சாமானியார்க்கிய வட்டகையையும், விசேடார்க்கிய வட்டகையையும் வைத்து, வைக்கப்பெற்ற ஒவ்வொன்றின் மேலும் ஒவ்வொரு பத்திரங்கிள்ளி,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம : என்று வைக்கவும்.

பின்பு, அருக்கிய வட்டகைகளுக்கு மேற்புறத்தில் முறையே மணியையும், பத்திர புஷ்பத் தட்டையும், பூசைக்கு உரிய பொருள்களையும் வைத்துவிட்டுச் சந்தனம் இழைத்துப் பெருவிரலால் வழித்துத் திருமஞ்சனப் பாத்திரத்துக் கழுத்திலேனும் அல்லது சிறு வெண்கலக் கிண்ணத்திலேனும் வைத்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம : என்று அச்சந்தனத்தின் மேல் ஒரு பத்திரங்கிள்ளி வைக்கவும்.

பீடத்திற்கு மேற்பாகத்தில் தீபம் ஏற்றி வைத்து அதற்கு ஒரு புஷ்பம் சாத்தவும்.

கிழக்குக்கும், தென்கிழக்குக்கும் இடையில் சூரிய பூசைக்கு இடம் வகுக்கவும்.

## 4. சூரிய பூசை $ ஆரம்பம்

பிறகு, சூரிய பூசையின் பொருட்டுக் கிழக்கு முக மாகத் திரும்பி உட்கார்ந்து கொண்டு,

ஓம் மகா கணபதயே நம: என்று கணபதியை நினைத்துச் சிரசில் குட்டிக் கொண்டு,

ஓம் சிவ குரவே நம: என்று சிவகுருவையும் கும்பிட்டு,

ஆசமனமும் பிராணுயாமமும் * செய்க. அதன் பின்னர்,

## 5. சூரிய சகளீகரணம்

[A. சூரிய கர நியாசம்]

ஓம் ர: அஸ்த்ராயபட் என்று வலக்கையால் இடக் கையை மேலும் கீழும் இரண்டிரண்டு தரமும், இடக்கை யால் வலக்கையை மேலும் கீழும் ஒவ்வொரு தரமும் துடைத்து (கரசுத்தி செய்து),

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூரியாய வௌஷட் என்று கைகள் அமிர்தத்தால் நனைந்ததாகப் பாவித்துக் கும்பிட்டுக் கைகளை விரித்துச் சேர்த்து,

ஓம் அம் ஹ்ருதயாய நம: என்று இரண்டு பெருவிரலில் இரண்டு சுட்டு விரலாலும்,

ஓம் அம் அர்க்காய சிரசே நம: என்று இரண்டு சிறு விரலில் இரண்டு பெரு விரலாலும்,

ஓம் அம் பூர்ப்புவ: ஸ்வரோம் ஜ்வாலிநீ சிகாயை நம: என்று இரண்டு மோதிர விரலில் இரண்டு பெரு விரலாலும்,

ஓம் ஹ்ரும் கவசாய நம: என்று இரண்டு நடுவிரலில் இரண்டு பெருவிரலாலும்,

ஓம் பம் பாநு நேத்ராப்யாம் நம: என்று இரண்டு உள் ளங்கைகளில் இரண்டு நடுவிரல் சுட்டு விரல்களை மடக்கி யும்,

---

$ இப்பூசை சிவானுக்கிரகம் உண்டாகும் பொருட்டுச் செய்வதாகும் சூரிய பூசை சிவபூசைக்கு அங்கம் என்று 'மோக சூத்திரம்' என்னும் உபாகமம் கூறுகிறது.

* ஆசமனம், பிராணுயாமம் செய்யும் முறையினைச் 'சைவானுட்டான முறை' என்ற நூலில் காண்க.

ஓம் ர: அஸ்த்ராய நம: என்று இரண்டு சுட்டு விரலில் இரண்டு பெருவிரலாலும் நியாசித்து (தடவி),

ஓம் ஹ்ரூம் கவசாய நம: என்று இரு கைகளை ஒன்றை ஒன்றினால் சுற்றி (அவகுண்டனம் செய்து),

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய வௌஷட் என்று கும்பிடவும். பின்பு,

[B- சூரிய அங்க நியாசம்]

ஓம் சிவ சூர்யாய நம

*ஓம் ர: அஸ்த்ராய பட்:* என்று இரு கைகளினால் உடலைப் பாவனையாகத் துடைத்து (அங்க சுத்தி செய்து),

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய நம: என்று அமிர்தம் உடலில் நனைந்ததாகப் பாவித்துக் கும்பிட்டு,

ஓம் அம் ஹ்ருதயாய நம: என்று வலக்கைப் பெருவிரலோடு கூடிய மோதிர விரலால் மார்பிலும்,

ஓம் அம் அர்க்காய சிரசே நம: என்று மேற்படி விரல்களால் சிரசிலும்,

ஓம் அம் பூர்ப்புவ: ஸ்வரோம் ஜ்வாலினீ சிகாயை நம: என்று மேற்படி விரல்களால் குடுமியிலும் நியாசித்து,

*ஓம் ஹ்ரூம் கவசாய நம:* என்று இரு கை நீட்டிய சுட்டு விரல்களால் கழுத்தைச்சுற்றி மார்புக்கு மத்தி வரையும் காட்டியும்,

*ஓம் பம் பாநுநேத்ராப்யாம் நம:* என்று வலக்கை நடு விரல் சுட்டு விரல்களை நீட்டிக் கண்களுக்கு நேராகக் காட்டியும்,

*ஓம் ர: அஸ்த்ராய நம:* என்று வலக்கைப் பெரு விரலோடு கூடிய மோதிர விரலால் இடவுள்ளங்கையிலும், இடக்கைப் பெருவிரலோடு கூடிய மோதிர விரலால் வலவுள்ளங் கையிலும் நியாசித்து,

*ஓம் ர: அஸ்த்ராய பட்:* என்று வலக்கை நடுவிரல் மூன்றாலும் இடவுள்ளங்கையில் மூன்றுதரம் தட்டி (தாளத்திரயம் செய்து),

*ஓம் ர: அஸ்த்ராய பட்* என்று தனக்குக் கீழும் மேலும் எட்டுத் திக்கிலும் வலக்கைப் பெருவிரல் நுனியும் சுட்டு விரல் நுனியும் சேர்த்துச் சொடித்து (ஒலியெழுப்பி)த் திக்குப் பந்தனம் செய்து,

*ஓம் ஹ்ரூம் கவசாய நம:* என்று வலக்கை நீட்டிய சுட்டு விரலால் தன்னை வலமாகச் சுற்றுதலாகிய அவ குண்டனம் செய்து,

*ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய வௌஷட்* என்று இரு கைகளையும் விரித்துத் தனக்கு நேராகப் பாதம் முதல் சிரசுவரைத் தூக்கிக் காட்டுதலாகிய மகா முத்திரையைக் காட்டித் தன்னைச் சிவ சூரியனாகப் பாவித்துக் கொள்க. அதன் பிறகு,

## 6. தரிசனார்க்கியம்

தாமிர மயமான (சூரிய) அருக்கிய வட்டகையில் சலம்விட்டு அதில் செஞ்சந்தனம் சிறிது கரைத்துச் சிவந்த புஷ்பமிட்டு, எழுந்து கிழக்கு முகமாக முழங்கால்களைப் பூமியில் ஊன்றிக்கொண்டு இருந்து இரு கைகளாலும் அருக்கிய வட்டகையை எடுத்து, சிரசு வரையும் உயர்த்திக் கொண்டுபோய்,

*ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய நம:* என்று சூரியனுக்கு எதிரில் தரிசனார்க்கியம் கொடுத்து (விட்டு) மேற்படி மந்திரத்தைப் பத்துத் தரம் செபிக்கவும்.

பிறகு, கிழக்கு நோக்கி உட்காரவும்.

## 7. சூரிய அருக்கியம்

*ஓம் ர: அஸ்த்ராயபட்* என்று தாமிர உலோகமான அருக்கிய வட்டகையைச் சலம் விட்டு அலம்பி வைத்துக் கொண்டு,

பிறகு அபிஷேக கலசத்தில் சலம் எடுத்து, அதனை இரு கைகளினாலும் நெற்றி வரையும் உயர்த்திக்கொண்டு போய், அக்கலச சலத்தில் புருவ நடுவிலிருந்து பெருகு

கின்ற அமிர்தம் கலந்ததாகப் பாவித்து, அதனை இறக்கிக் கொண்டு வந்து தனது முன்னே வைத்திருக்கும் அருக்கிய வட்டகையில்,

ஓம் கம் க்ஷோல்காய வௌஷட் என்று ஊற்றி,

ஓம் ஹ்ரூம் கவசாய நம: என்று அர்க்கிய வட்டகையில் செஞ்சந்தனம் சிறிது கரைத்து, புஷ்பம் அட்சதை போட்டு,

சூரிய ஆறு அங்க மந்திரங்களாலும், சூரிய மூலமந்திரத்தாலும் பத்திரங்கிள்ளிப் பூசித்து,

ஓம் ஹ்ரூம், கவசாய நம: என்று பெருவிரல் மடக்கிய வலக்கையினால் மூடி,

முன் பூசித்த மந்திரங்களால் அபிமந்திரித்து (மானதமாகக் கூறி),

ஓம் ர: அஸ்த்ராயபட் என்று சோடிகா முத்திரையால் அர்க்கிய வட்டகைக்குத் திக்குப் பந்தனமும்,

ஓம் ஹ்ரூம் கவசாய நம: என்று நீட்டிய வலக்கைச் சுட்டு விரலால் அவகுண்டனமும் (வலமாகச் சுற்றுதலும்) செய்து,

ஓம் கம் க்ஷோல் காய வௌஷட் என்று தேனு முத்திரை * கொடுக்கவும்.

## 8. அருக்கிய புரோட்சணமும், விக்கின நீக்கமும்

முன் பூசித்த அர்க்கிய சலத்தை எடுத்து ஒரு புஷ்பத்தினால் தொட்டு,

தன்னையும், பூசா ஸ்தானத்தையும், புஷ்பம் முதலிய பூசாத் திரவியங்களையும், எட்டு இதழ்களுடைய தாமரைப் பூ வரைந்த தாமிரத் தகட்டை (சூரியத் தகட்டை)யும்,

* தேனு முத்திரை - இது இரு கைகளின் விரல்களைச் சேர்த்துக் கோர்த்து, வலச் சுட்டு விரலோடு இட நடு விரலையும், இடச் சுட்டு விரலோடு வல நடு விரலையும், வல மோதிர விரலோடு, இடச் சிறு விரலையும், இட மோதிர விரலோடு, வலச் சிறு விரலையும் சேர்த்துப் பசுவின் முலைக் காம்பு போல் பிடித்தல் ஆகும்.

*ஓம் ர: அஸ்த்ராய பட்* என்று புரோட்சித்து, அதன் பிறகு ஒரு புஷ்பத்தையேனும் அல்லது ஒரு பத்திரத்தை யேனும் இரண்டாகக் கிள்ளி.

*ஓம் ர: அஸ்த்ராய பட்* என்று இரு கைகளினால் இரண்டு பக்கத்திலும் *நாராச முத்திரை**யினால் தெறித்து, அங்குள்ள விக்கினங்களைப் போக்கிச் சூரியனைப் பூசிக்க.




சூர்ய பூஜா சக்கரம்

## 9. துவார பூசை

தனக்கு எதிரே, ஓர் ஆசனத்தில் சூரியனைப் பூசிக்க வைத்துள்ள தாமரைப்பூ வரைந்த தாமிரத் தகட்டிலே,

*ஓம் அம் தண்டினே நம:* (1) S என்று சூரியத் தகட்டின் மேற்குத் துவாரத்தின் தென்பாலிலும்,

* நாராச முத்திரை — இஃது இரண்டு கையின் இரண்டு பெருவிரல்களின் நுனியில் இருக்கும் பத்திர புஷ்பங்களை இரண்டு சுட்டு விரல்களினாலும் தெறிப்பது.

S இந்த எண்கள் சூரிய பூசாச் சக்கரத்தில் வரிசை முறைக்கு அமைத்துள்ளவை.

*ஓம் அம் பிங்களாய நம:* (2) என்று மேற்குத் துவாரத்தின் வட பாலிலும்,

*ஓம் அம் கணபதயே நம:* (3) என்று சூரியத் தகட்டின் ஈசானத்திக்கிலும்,

*ஓம் அம் குருப்யோ நம:* (4) என்று சூரியத் தகட்டின் அக்கினித்திக்கிலும் துவார மூர்த்திகளைப் பூசிக்க.

## 10. சூரிய அஷ்ட தளபத்ம பூசை

எட்டு இதழ்கள் கொண்ட தாமரைப் பூ வரைந்த சூரியத் தகட்டின் நடுவில்,

*ஓம் அம் ப்ரபூதாஸநாய நம:* (5) என்று வெண்ணிறப் பீடத்தை அருச்சிக்க. பிறகு,

1. *ஓம் அம் விமலாய நம:* (6) என்று சூரியத் தகட்டின் அக்கினி மூலையில் வெண்ணிறச் சிங்கத்தையும்,

2. *ஓம் அம் ஸாராய நம:* (7) என்று நிருதி மூலையில் செந்நிறச் சிங்கத்தையும்,

3. *ஓம் அம் ஆராத்யாய நம:* (8) என்று வாயு மூலையில் பொன்னிறச் சிங்கத்தையும்,

4. *ஓம் அம் பரமசுகாய நம:* (9) என்று ஈசான மூலையில் பசுமைநிறச் சிங்கத்தையும் தியானித்து அருச்சிக்க.

அதன்பிறகு, அந்நான்கு சிங்கங்கள் தாங்கிய வெண்ணிறப் பதுமத்தின் மேல்,

*ஓம் அம் பத்மாய நம:, ஓம் அம் கர்ணிகாயை நம:* (10) என்று கர்ணிகை (தாமரைக் கொட்டை) யோடு கூடியதாகிய வெண்ணிறப் பதுமத்தைப் பூசிக்க. பின்னர்,

1. *ஓம் ராம் தீப்தாயை நம:* (11) என்று சூரிய பதுமத்தின் கிழக்கு இதழிலும்,

2. *ஓம் ரீம் சூட்சுமாயை நம:* (12) என்று தென்கிழக்கு இதழிலும்,

பேசிடுவெண்டாமரையாசனனாகிச்சிவந்த
பேரொளிசேர்தருவிருத்தமண்டலத்தியனாய்
ஆசறுமாதுளங்கமலர்போலுநிறத்தினனாய்
அலர்ந்தனவாயிருபுயங்களடைந்தவெண்டாமரையின்
காசறு நாளம்பிடித்தகையிரண்டினோடு
கருதுமொருமுகமிரண்டுகண்களுடையவனாய்த்
தேசுமலிசெய்யவுடைதனையுடுத்தோனாகித்
திகழ்சிவசூரியனைநிதஞ்சிந்தனைசெய்திடுவாம்

*ஓம் கம் கஷோல்காய சூர்ய மூர்த்தயே நம:* (21) என்று சூரிய ஆசனத்தின்மீது மூர்த்தியை வலக்கைப் பெருவிரலுடன் கூடிய மோதிர விரலால் (*திவ்ய முத்திரையால்*) நியாசம் செய்து,

*ஓம் பம் பாநு நேத்ராப்யாம் நம:* என்று வலக்கை நடுவிரல் சுட்டு விரல்களை நீட்டி நேத்திரம் கொடுத்து,

கை நிறைய புஷ்பம் வைத்துக் கும்பிட்டுக் கொண்டு, நெற்றி நடுவில் பிரகாசிக்கும் *செந்நிற பிந்து* தனது புஷ்பாஞ்சலியில் வந்ததாக எண்ணிச் சூரிய பதுமத்தின்மேல்,

*ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய நம:* (22) என்று சூரிய மூலத்தால் புஷ்பத்தைச் சாத்தி,

*ஓம் கம் கஷோல்காயநம:* என்றுஆவாகன *முத்திரை*1யால் *ஆவாகனமும்,* அம்மந்திரத்தினலேயே *ஸ்தாபன முத்திரை* 2 யால் ஸ்தாபனமும், *சந்நிதான முத்திரை* 3 யால் சந்நிதானமும், *சந்நிரோதன முத்திரை* 4 யால், சந்நிரோதனமும் செய்து,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாய நம: என்று சூரிய மூர்த்திக்குப் பிரீதி உண்டாகப் பிம்ப முத்திரை5 யினைக் காண்பிக்க.

## 12. இருதயாதி நியாசம்

ஓம் அம் ஹ்ருதயாய நம: என்று சூரியமூர்த்தியின் இருதயத்தில் பெருவிரலோடு கூடிய சிறு விரலாலும்,

1. ஆவாகன முத்திரை - இஃது இரண்டு மோதிர விரல்களிலும் இரண்டு பெருவிரல்களையும் சேர்த்துக் காட்டுதல். (இக்கிரியை இறைவனை எதிர்முகமாக்கல்
2. ஸ்தாபன முத்திரை — இஃது ஆவாகன முத்திரையை அதோமுகமாகக் கவிழ்த்துக் காட்டுதல். (இக்கிரியை இறைவனை எழுந்தருளி இருக்குமாறு வேண்டுதல்)
3. சந்நிதான முத்திரை—இஃது இரண்டு கைகளையும் முஷ்டியாகப் பிடித்து இரண்டு பெருவிரல்களையும் உயர்த்திக் காட்டுதல் (இக்கிரியை இறைவனை அண்மையில் உள்ளவராக ஆக்கிக்கொள்ளுதல்.)
4. சந்நிரோதன முத்திரை — இது சந்நிதான முத்திரையையே இருபெரு விரல்களையும் முஷ்டிக்குள்ளே மடக்கிக் காட்டுதல். (இக்கிரியை பூசிக்கும்வரை இறைவனை நீங்காது இருக்க வேண்டுதல் )
5. பிம்ப முத்திரை — இஃது இருகைப் பெருவிரல்களின் அடியினைச் சேர்த்து இருமோதிர விரல் நடுவிரல்களின் நுனிகள் மட்டும் ஒன்றையொன்று பொருந்த வளைத்து மற்றைய விரல்கள் பிரிந்து நிற்கப் பிடித்தல்.

ஓம் அம் அர்க்காய சிரசே நம : என்று சூரியமூர்த்தியின் சிரசில் பெரு விரலோடு கூடிய மோதிர விரலாலும்,

ஓம் அம் பூர்ப்புவ:ஸ்வரோம் ஜ்வாலினீ சிகாயை நம; என்று சூரியமூர்த்தியின் சிகையில் பெருவிரலோடு கூடிய நடு விரலாலும்,

ஓம் ஹ்ரூம் கவசாய நம : என்று சூரியமூர்த்தியின் கழுத்தைச்சுற்றி மார்பு நடுவில் இரு கைகளின் சுட்டு விரல்களாலும்,

ஓம் ர: அஸ்த்ராய நம : என்று சூரியமூர்த்தியின் உள்ளங்கைகளில் பெருவிரலோடு கூடிய மோதிர விரலாலும் பாவனையாக நியாசம் செய்து,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய நம : என்று உயர்த்திய பெரு விரலையுடைய வலக்கை முஷ்டியினால் ஏகத்துவம் (ஒன்றுப் இருக்கும் தன்மையாகப்) பாவித்து,

ஓம் ர: அஸ்த்ராய பட் என்று சோடிகை முத்திரையினால் சுவாமிக்குத் திக்குபந்தனமும்,

ஓம் ஹ்ரூம் கவசாய வௌஷட் : என்று நீட்டிய வலக்கைச் சுட்டுவிரலால் சுவாமிக்கு அவகுண்டனமும்,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாய வௌஷட் என்று சுவாமிக்குத் தேனு முத்திரையும், மகாமுத்திரை*யும் காண்பிக்கவும்.

உஷா, பிரத்யுஷாதேவி பூசை

சூரியமூர்த்திக்குத் தென்பாகத்திலும் வடபாகத்திலும் முறையே,

---

* மகாமுத்திரை—இரு கைகளை விரித்துச் சேர்த்துச் சுவாமிக்கு நேராகக் காட்டுதலாம்,

‡ இவ் உஷா பிரத்யுஷா பூசையினை அகோர சிவப் பத்ததி சோம சம்பு பத்ததி முதலியன கூறவில்லை. ஆயினும் ஆன்றோர் நடைமுறை வழக்கில் உள்ளது. சூக்குமாகமத்தில் முத்திகாமிக்கு இப்பூசை வேண்டுவதில்லை என்று கூறுவதால், போககாமிக்கு இப்பூசை அவசியம் என்பதாம்.

ஓம் ஹாம் உஷா தேவ்யை நம, (23), ஓம் ஹாம் பிரத்யுஷா தேவ்யை நம (24) என்று பூசித்துச் சந்தனம் புஷ்பம் சாத்தி,

## 14. பாத்தியா சமநார்க்கியம் முதலியன

சூரிய அர்க்கிய வட்டகையை எடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு மிருக முத்திரை*யினுல்,

ஓம் கம் கஷோல்காய நம: என்று சூரியமூர்த்தியின் பாதங்களிலே இரண்டுமுறை பாத்தியமும்.

ஓம் கம் கஷோல்காய **ஸ்வதா** என்று சூரியமூர்த்தியின் முகத்திலே மூன்று முறை ஆசமனமும்,

ஓம் கம் கஷோல்காய **ஸ்வாஹா** என்று சூரியமூர்த்தியின் சிரசிலே ஒரு முறை அருக்கியமும் கொடுக்க. பிறகு,

ஓம் கம் கஷோல்காய **வௌஷட்** என்று சூரியமூர்த்திக்குப் புஷ்பம், அறுகு, அட்சதை ஆகியஇவற்றைச் சாத்துக.

## 15. பாவனுபிஷேகம்

[பாவனை — மனத்தினுல் நினைத்தல்]

கையிலே அபிஷேகக்கலசத்தை ஏந்தி எண்ணெய்க்காப்பு, மாக்காப்பு, பஞ்சாமிர்தம், பால், தயிர், தேன், இளநீர், சந்தனம் முதலிய அபிஷேகப் பொருள்களை மனத்தினுலே நினைத்து,

ஓம் கம் கஷோல் காய ஸ்வாஹா என்று புறத்தே சலம் விட்டுக்கொண்டு பாவனுபிஷேகம் செய்து,

ஓம் கம் கஷோல்காய நம: என்று செஞ்சந்தனம், புஷ்பம் முதலியவற்றைச் சூரியமூர்த்திக்குச் சாத்தி, அதன்பின்,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய நம: என்று கையில் புஷ்பம் ஏந்தி அஞ்சலியாக மும்முறை சாத்தி,

---

* மிருக முத்திரை—இது வலக்கைப் பெருவிரல் மோதிரவிரல் நடுவிரல்களைச் சேர்த்துச் சிறுவிரல் சுட்டு விரல்களை நீட்டிப்பிடித்தலாம்.

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய ஸ்வாஹா என்று மிருக முத்திரையினால் ஒரு முறை அர்க்கியம் கொடுத்து, பத்ம முத்திரை*, பிம்ப முத்திரைகளைக் காட்டவும்.

## 16. சூரிய லயாங்க பூசை

சூரியமூர்த்தியின் இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்த்ரம் என்ற ஆறு இடங்களிலும் முறையே சூரிய ஷடங்க மந்திரத்தினால் அர்ச்சித்து, ஆறு அங்க மந்திர தேவதைகளைத் தியானித்து அவர்களிடம் போகாங்க பூசை செய்ய அனுமதி வேண்டிப் பெற்றுக் கொள்ளவும். பின்பு,

## 17. சூரிய போகாங்க பூசை

சூரியமூர்த்தியின் இருதயம் முதலிய ஆறு இடங்களிலிருந்து அந்தந்த மந்திரமூர்த்தியைக் கிரகித்து,

ஓம் அம் ஹ்ருதயாய நம: என்று சூரிய பதுமத்தின் அக்கினி தளத்திலும் (இதழிலும்),

ஓம் அம் அர்க்காய சிரசே நம: என்று ஈசான தளத்திலும்,

ஓம் அம் பூர்ப்புவ: ஸ்வரோம் ஜ்வாலிநீ சிகாயை நம: என்று நிருதி தளத்திலும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று வாயு தளத்திலும்,

ஓம் பம் பாநுநேத்ராப்யாம் நம: என்று சூரியமூர்த்திக்கு நடுவிலும்,

ஓம் ர: அஸ்த்ராய நம: என்று கிழக்கு, தெற்கு, மேற்கு வடக்கு என்ற நான்கு தளங்களிலும் பூசித்து,

இருதயம், சிரசு, சிகை, கவசம் ஆகிய நான்கு மந்திர மூர்த்திக்குத் தேனு முத்திரையும் நேத்திர மந்திர மூர்த்திக்குக் கோவிடாண முத்திரை S யும், அஸ்திர மந்திர

---

* பத்ம முத்திரை—இஃது இரு கைகளையும் பத்மம் (தாமரை) போல் சேர்த்து நடுவில் இரு பெருவிரல்களையும் கர்ணிகை (தாமரைக் கொட்டை) போல் சேர்த்துப் பிடித்தலாம்,

S. கோவிடாண முத்திரை—இது வலக்கைச் சிறுவிரல், மோதிர விரல்களை மடக்கிப் பெருவிரலினால் பிடித்து, நடுவிரல் சுட்டுவிரல்களை நீட்டி விரித்துப்பிடித்தலாம்.

மூர்த்திக்குத் திராசினி முத்திரை*யும் ஒருசேரக் காட்டிக் கும்பிடுக.

பின்பு, பூசித்த முறைப்படியே ஸ்வாஹா அந்தமாக அர்க்கியம் கொடுக்கவும். பிறகு,

## 18. சோமாதி கிரக பூசை

ஓம் சம் சோமாய நம: (25) என்று சூரிய பத்ம தளத்தின் கிழக்கு நுனியிலும்,

ஓம் பும் புதாய நம: (26) என்று தெற்கு நுனியிலும்,

ஓம் ப்ரும் ப்ருஹஸ்பதயே நம: (27) என்று மேற்கு நுனியிலும்,

ஓம் பம் பார்க்கவாய நம: (28) என்று வடக்கு நுனியிலும்,

ஓம் அம் அங்காரகாய நம: (29) என்று தென்கிழக்கு நுனியிலும்,

ஓம் சம் சனைச்சராய நம: (30) என்று தென்மேற்கு நுனியிலும்,

ஓம் ரம் ராஹவே நம: (31) என்று வடமேற்கு நுனியிலும்,

ஓம் கம் கேதவே நம: (32) என்று வடகிழக்கு நுனியிலும் பூசித்து,

சந்திரன் முதலிய கிரகங்களைத் தியானித்து அர்ச்சித்து

ஓம் சம் சோமாதிப்ய ஸ்வாஹா: என்று சந்திரன் முதலியோர்களுக்கு அர்க்கியம் கொடுத்து.

ஓம் சம் சோமாதிப்யோ நம: என்று சந்தனம் புஷ்பம் சாத்தி நமஸ்கார முத்திரை S காட்டவும்.

---

* திராசினி முத்திரை — இது வலக்கைச் சிறுவிரல் மோதிர விரல் நடுவிரல்களை மடக்கிப் பெருவிரலால் பிடித்துச் சுட்டு விரலைமட்டும் நீட்டிப்பிடித்தலாம்.

S நமஸ்கார முத்திரை — இஃது இருகைகளையும் சேர்த்து நிமிர்த்தி வலக்கைப் பெருவிரல் இடக்கைப் பெருவிரலின்மேல் சேர்த்துப் பிடித்தலாம்

## 19. நைவேத்தியம் தூப தீபம் கற்பூர தீபம்

இடக்கையால் மணி அடித்துக்கொண்டு, பத்திர புஷ்பம் தூவி,

ஓம் கம் கஷோல்காய தூபம் ஸ்வாஹா என்று தூபத்தையும்,

ஓம் கம் கஷோயல்காய தீபம் ஸ்வாஹா என்று தீபத்தையும் காட்டி, அதன்பின்,

ஓம் ர : அஸ்த்ராயபட் : என்று நைவேத்தியத்தை (அல்லது பாயசம், பழம் முதலியவற்றை) அர்க்கிய சலத்தால் புரோட்சித்து,

ஓம் கம் கஷோல்காய நைவேத்தியம் ஸ்வாஹா என்று புஷ்பத்தோடு கூடிய மிருக முத்திரையினுல் நிவேதித்து,

ஓம் கம் கஷோல்காய பானீயம் ஸ்வாஹா என்று (அர்க்கிய நீரால் தாகோப சாந்தியின் பொருட்டுப்) பானீயம் அளித்து, தாம்பூலம் நிவேதித்து,

அதன்பின், ஸ்வதா, ஸ்வாஹா அந்தமான கஷோல்க மந்திரத்தால் முறையே ஆசமனமும், அர்க்கியமும் அளித்து, முன்போல் மந்திர உச்சரிப்புடன் தூப தீபம் காட்டி,

ஓம் கம் கஷோல்காய கற்பூரதீபம் ஸ்வாஹா என்று கற்பூர தீபாராதனை செய்து, தர்ப்பணம் (கண்ணுடி), குடை, சாமரம், விசிறி முதலிய உபசாரங்களைப் புஷ்பத்தால் பாவனையாகச் செய்து, அப்புஷ்பங்களைச் சாத்தி மீட்டும் கஷோல்க மந்திரத்தால் ஆசமனுர்க்கியம் கொடுக்கவும். பிறகு,

## 20. செப சமர்ப்பணம்

இடக்கையிலே ஒரு பத்திரத்தின் மேல் புஷ்பம் எடுத்து வைத்துக்கொண்டு அதனை.

ஓம் ர: அஸ்த்ராய பட் என்று அர்க்கிய சலத்தால் புரோட்சித்து, வலக்கையால் மூடி,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாய நம: என்று பத்துதரம் செபித்து அதற்குத் திக்குப்பந்தனம், அவகுண்டனம் செய்து, அப்பத்திர புஷ்பத்தை வலக்கையில் வாங்கி, அதில் அர்க்கிய நீர் விட்டு,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாய வௌஷட் என்று உற்பவ முத்திரை * யினுலே அந்த அர்க்கிய நீரைச் சூரிய மூர்த்தியின் வலது கையில் (எதிரில்) விட்டுப் புஷ்பத்தைச் சூரியமூர்த்திக்குச் சாத்தி,

பின்பு, சூரிய ஷடங்க மந்திரங்களுக்கும் இயன்றவாறு மேற்படி மந்திரங்களையே செபித்து, முன்போல் புஷ்பம் சாத்தவும்.

## 21. சூரிய தோத்திரம்

பிறகு சூரியமூர்த்தியைக் கும்பிட்டு,

"விளங்குதண்டி முதலோரால் சேவிக்கப் படுவோன்
விமலன்முதல் நாற்சிங்க பதாசனத்தின் மேலோன்
களங்கமிலாத் தீத்தைமுதல் சத்திகண சகிதன்
கருதருண மணிஒளியன் கடோற்கான்ம மூர்த்தி
துளங்கலில்தன் அங்கந்தன் அங்கமெனும் கிரகம்
தொகும்உடுவா தியசூழச் சுவேதகஞ்சத்து இவர்ந்தோன்
வளங்கொள்சுவே தாம்புசத்தோள் கரன்இருநல் விழியோன்
வருசிவ சூரியன்காக்க மகிழ்ந்தடியேங் களையே-"

என்று சூரிய மூர்த்தியைத் தோத்திரம் செய்து நமஸ்காரம் பண்ணி,

ஓம் கம் கஷோல்காய நம: என்று சூரியமூர்த்தியைப் பூசித்து,

"சூரியமூர்த்தியே! எனது அபசாரங்களை எல்லாம் பொறுத்தருள்க" என்று பிரார்த்திக்கவும். பிறகு,

* உற்பவ முத்திரை—இது வலக்கையின் சிறுவிரலை மடக்கிச் சுட்டு விரலை நீட்டி மற்றைய விரல்களைச் சிறிது வளைத்துப் பிடித்தலாம்.

## 22. சூரிய நீரோதார்க்கியம்

ஓம் கம் காஷோல் காய நிரோதார்க்கியம் ஸ்வாஹா என்று சூரியார்க்கியத்தினுல் நிரோதார்க்கியம் கொடுத்து, ''சூரியமூர்த்தியே, சிவபூசை முடியும்வரையும் இங்கு அருள் கூர்ந்து எழுந்தருளி இருத்தல் வேண்டும்'' என்று சூரியமூர்த்தியை வேண்டிக்கொள்ளவும்.

பிறகு, சிவபூசையினை ஆரம்பிக்கவும்.

[சிவபூசை முடிவில் யாவர்க்கும் பராங்முகார்க்கியம் அளித்து, இருதயத்தில் ஒடுக்கியவுடன், சூரிய மூர்த்தி, உஷாதேவி, பிரத்யுஷாதேவி, சோமாதி கிரகங்கள் முதலியோர்க்குப் பராங் முகார்க்கியம் அளித்து இருதயத்தில் ஒடுக்கி அதன்பின், தேசஸ்சண்ட பூசையைத் த்வனிச்சண்ட பூசையுடன் கூட்டி ஒரே காலத்தில் செய்து முடித்தல் ஆன்ருேர் வழக்கம் ஆகும்.

குறிப்பு: சூரிய சிகாமந்திரத்தை, 'ஓம் பூர்ப்புவ: ஸ்வரோம் ஜ்வாலிநீ சிகாயை நம: என்றும், ஓம் ஜ்வாலிநீ சிகாயை நம: என்றும் கூறுவாரும் உளர்.

---


வ.மே.
வ
வ.கி.
மே
கி
தெ.மே
தெ.கி.
6 மகாகாளர்
7 யமுனை
2 சரசுவதி
3 மகாலட்சு
1 கணபதி
5 காங்கை
4 நந்தி
8 அஸ்த்ர அ பால
9 வாஸ்த் வதி
1 மகா கணபதி
2 மகா லட்சுமி
9 பிர்மா
8 விஷ்ணு
7 ஸ்கந்தர்
6 அம்பிகா
5 ஸ்ரீகண்ட
4 அநந்த குரு
3 சதாசிவர்
இஷ்ட காமிய மூர்த்தி
த்வனிச் சண்டர்
இடப தேவர்
தேசஸ் சண்டர்
வித்யா பீடம்
செப மாலை
குரு மூர்த்தி

சிவபூஜா சக்கரம்.

# III. சிவபூசைப் பகுதி

## 1. சிவபூசைத் தொடக்கம்

சிவ சூரிய பூசையினை மிக விருப்பத்துடன் செய்த பின்பு, வடக்கு முகமாக இருந்து விபூதியை உத்தூளனமாக அணிந்து, ஆசமனம் செய்து, தொடுமிடம் தொட்டு, (கரசுத்தி, கர நியாசம், அங்கசுத்தி, அங்க நியாசம் ஆகிய) சகளீகரணம் செய்து மும்முறை பிராணாயாமமும் * செய்தல் வேண்டும்.

பின்னர், சிவபூசைக்கு வேண்டிய சாமானியார்க்கியத்தைக் கூட்டுக.

## 2. சாமானியார்க்கியம்

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று சாமானியார்க்கிய பாத்திரத்தைச் சலத்தினால் அலம்பி,

ஓம் ஹாம் ஹ்ருதாய வௌஷட் என்று அபிஷேக கலசத்தில் சலங்கொண்டு, அதனை இரண்டு கைகளினாலும் புருவ நடுவரையும் உயர்த்திக் கொண்டுபோய், புருவ நடுவிலுள்ள அமிர்தம் அச்சலத்தில் கலந்ததாகப் பாவித்து, அக்கலசத்தை இறக்கிக்கொண்டு வந்து தன் முன்னே வைக்கப்பெற்றிருக்கும் சுத்தமான சாமானியார்க்கிய வட்டிலையிலே ஊற்றி, அதன்கண்,

ஓம் ஹும் கவசாய நம: என்று சந்தனம், புஷ்பம், அட்சதை, அறுகு முதலியன இட்டு,

ஓம் என்று ஏழுதரம் அர்ச்சித்து,

ஓம் ஹும் கவசாய நம: என்று பெருவிரலை மடக்கிய வலக்கையினால் மூடி,

ஓம் என்று ஏழுதரம் அபிமந்திரித்து (மந்திரமயமாகச் செபித்து).

---

* ஆசமனம், சகளீகரணம், பிராணாயாமம் ஆகிய இவை செய்யும் முறையினை, "சைவானுட்டான முறை" என்ற நூலில் விளக்கமாகக் காண்க.

ஓம் ஹ : அஸ்த்ராயபட் என்று சோடிகை முத்திரையினால் திக்குப்பந்தனமும்,

ஓம் ஹைம் கவசாய நம : என்று நீட்டிய சுட்டு விரலால் வலமாக அவகுண்டனமும் செய்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய வௌஷட் என்று தேனு முத்திரை S கொடுத்து,

ஓம் ஹ : அஸ்த்ராய பட் என்று ஒரு புஷ்பத்தால் சாமானியார்க்கியத்தைத் தொட்டுத் தன் சிரசிலும், பூசாத் திரவியங்களிலும் மேற்கு வாயிலிலும் புரோட்சிக்கவும்.

## 3. பச்சிம (மேற்குத்) துவார தேவர் பூசை

1. ஓம் ஹாம் கணபதயே நம: என்று சுவாமி பீடத்திற்கு மேற்குத் துவாரத்தின் (வாசலின்) மேற்புறம் தென் பாகத்திலும்,

2. ஓம் ஹாம் சரஸ்வத்யை நம: என்று மேற்குத் துவாரத்தின் மேல்புறம் வடபாகத்திலும்,

3. ஓம் ஹாம் மகாலட்சுமியை நம : என்று கணபதிக்கும், சரசுவதிக்கும் நடுவிலும்,

4. ஓம் ஹாம் நந்திநே நம : என்று கணபதிக்குத் தென் பாகத்திலும்,

5. ஓம் ஹாம் கங்காயை நம: என்று கணபதிக்கும் நந்திக்கும் நடுவிலும்,

6. ஓம் ஹாம் மகாகாளாய நம : என்று சரசுவதிக்கு வடபாகத்திலும்,

7. ஓம் ஹாம் யமுனையை நம : என்று சரசுவதிக்கும் மகாகாளருக்கும் நடுவிலும் பூசித்து, பின்பு அவ்வெழுவர்களையும் நினைத்து,

ஓம் ஹாம் சர்வேப்யோ துவாரபாலேப்யோ நம : என்று பொதுவாகப் பூசித்து, "நீங்கள், பூசாதானத்தில் இடையூறு வாராமல் பாதுகாத்துக் கொண்டிருத்தல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு, பின்னர்,

---

S தேனு முத்திரையைச் சூரிய பூசை 9-வது தலைப்பில் காண்க

## 4. இடபதேவர் பூசை

ஓம் ஹாம் ரிஷபாய நம : என்று சுவாமி பீடத்தின் கிழக்குத்துவாரத்தில் இடபதேவர் மேற்குமுகம் நோக்கி இருப்பதாகக் கருதிப் பூசிக்க, பின்பு,

## 5. விக்கின நீக்கம்

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம : என்று திவ்ய முத்திரைT யினுல் வலக்கண்ணையும் இடக்கண்ணையும் நியாசித்து (தொட்டு), மேனேக்கிப் பார்த்து வானிலுள்ள விக்கினங்களையும்,

ஓம் ஹ : அஸ்த்ராயபட் என்று இரண்டுகைகளையும் மாற்றி, நாராச முத்திரை SS யால் தனக்கு இருபக்கங்களிலும், புஷ்பங்களைத் தெறித்து இடையிலுள்ள விக்கினங்களையும்,

ஓம் ச்லீம் பம் சும் ஹூம்பட். பாசுபதாஸ்த்ராய நம : என்று வலக்குதிக்காலால் பூமியில் மூன்று தரம் தட்டிப் பூமியிலுள்ள விக்கினங்களையும் போக்குக.

ஓம் ஹ : அஸ்த்ராய நம : என்று இம்மூன்றுவித விக்கினங்களையும் போக்கியதாக மணியை மூன்றுமுறை அடிக்கவும்.

## 6 பச்சிமத் துவார பாலகர் பூசை

ஓம் ஹாம் அஸ்த்ரத்வார பாலாய நம : என்று சரசுவதிக்குச் சற்றுக் கிழக்கிலும்,

ஓம் ஹாம் வாஸ்த்வதிபதயே ப்ரஹ்மணே நம : என்று அஸ்திர துவாரபாலகர்க்குச் சற்றுத் தெற்கிலும் பூசித்து, ஸ்வாஹா அந்தமாக அவரவர் மந்திரத்தால் சாமானியார்க்கியத்தால் அர்க்கியம் அளித்துப் புஷ்பம் சாத்துக. அதன்பின்,

## 7. பூதசுத்தி

[I. சீவசுத்தி, II. சூக்கும தேகசுத்தி, III. தூல தேகசுத்தி]

முன்னர், நன்கு நிமிர்ந்து உட்கார்ந்து குட்டிக்கொண்டு கும்பிட்டுக் கரசுத்தி கரநியாசம் செய்து சீவசுத்தியினைச் செய்க.

---

T திவ்ய முத்திரையைச் சூரியபூசை 11-வது தலைப்பில் காண்க SS நாராச முத்திரையினை சூரியபூசை 8-வது தலைப்பில் காண்க.

[I சீவசுத்தி (சீவனை சிவனுக்கல்)]

## A. சுழுமுனாடித் தியானம் :

சுழுமுனாடியானது இருகால்களின் பெருவிரல்கள் இரண்டின் நின்றும் தொடங்கி, மூலாதாரம், (இடுப்பு)வரை யும் இருவடிவாகவும், அதற்குமேல் பிரமரந்திரம் (உச்சி) வரையும் ஒரே வடிவாகவும் ஓடுகின்றது; இடை பிங்கலை யுடன் பின்னிக்கொண்டு, உட்டுளையுடன் மின்னற்கொடி போல் திகழ்கின்றது.

சுழுமுனாடியில் இருதயம், கண்டம், தாலு (நாக்கு) அடி, புருவநடு, பிரமரந்திரம் என்ற ஐந்து இடங்களில் கீழ் நோக்கிய தாமரை மொட்டுகள் விளங்குகின்றன.

சுழுமுனா நாடியின் உள்ளும் புறமும் அமிர்தினைப் பொழியும் குண்டலினி சத்தியும், அதனிடத்தில் தீபம் போல் ஹூம் என்ற பீஜமும் உள்ளன. இவ்வாறு சுழுமுனா நாடியினைத் தியானிக்க.

## B. அகத்தாமரை மொட்டுகளை அலர்த்தல் :

ஹூம் என்ற பீஜ ஒலியோடு வாயுவை இடமூக்கின் வழியாக உள்ளே வாங்கி நிறுத்தி, அதன்பின் அதனைச் சுழுமுனாடி வழியாகத் துவாத சாந்தம் வரையும் எழுப் பிச் சோடிகை முத்திரையினால் ஹூம்பட் என்று இடைவிடாது ஐந்துதரம் உச்சரித்து, இருதயம் முதலிய ஐந்து இடங் களில் கீழ் நோக்கிய தாமரை மொட்டுகள் ஐந்தும் மேல் நோக்கி மலர்ந்ததாகப் பாவித்து, வாயுவை வலமூக்கின் வழியே வெளிவிடுக.

## C. ஆத்ம யோசனை :

பின்பு, மீட்டும் வாயுவை இடமூக்கினால் உள்ளே வாங்கி நிறுத்தி, இருதயத்தில் மின் ஒளி போல் ஒளிவிடும் ஹம் என்ற ஆத்மபீசத்தில் திகழ்வதும், மிக நுண்ணிய வடிவுடையதும், புரியட்டகத்தினின்று (சூக்கும சரீரத்தி னின்று) விடுபட்ட தனிமையுடையதுமான ஆன்மாவை இருதயத்தினின்றும் சங்கார முத்திரை S யினாலே,

S சங்காரமுத்திரை - இது. வலக்கையின் சிறுவிரல் முதலிய நான்கு விரல் களையும் பெருவிரல் அடியில் சேர்த்துப் பிடித்தலாம்

ஓம் ஹூம் ஹாம் ஹம் ஹாம் ஹூம் ஆத்மநே நம : என்று எடுத்து அவ்வாயுவோடு மேலே கண்டம், தாலுஅடி, புருவ நடு, பிரம ரந்திரம் இவற்றின் வழியே சுழுமுனை நாடி மூலம் ஏற்றி,

"இவ்வான்மா மீட்டும் இவ்வுடலில் வந்து இன்ப துன்பங்களை அனுபவிக்க இருப்பதாக நினைத்து", துவாத சாந்தத்தில் இருக்கும் சிவனிடத்தில் சேர்க்க. அப்போது சீவன், சிவனோடு சிவனாக விளங்குகிறான் என்பதாகும்.

[ II. சூக்கும தேகசுத்தி ]

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று கண்களை மூடிக் கொண்டு மனத்தினாலே சூக்கும உடலில் (புரியட்டக சரீரத்தில்)உள்ள சப்தம், பரிசம் என்ற இரண்டை இருதயத்தி லுள்ள பிரமனிடத்தும், இரதம் என்ற ஒன்றை, கண்டத்தி லுள்ள விஷ்ணுவிடத்தும், ரூபம், கந்தம் என்ற இரண்டை, தாலு அடியிலுள்ள உருத்திரனிடத்தும், புத்தி, அகங்காரம் என்ற இரண்டை, புருவ நடுவிலுள்ள மகேசுவரனிடத்தும், மனம் என்ற ஒன்றை (அத்துடன் விந்துவை), பிரம ரந்தி ரத்திலுள்ள சதாசிவமூர்த்தியினிடத்தும் ஒடுக்கிச்சேர்த்த தாகக் கருதிச் சூக்கும வுடல் பரிசுத்தம் பெற்றதாகப் பாவிக்க.

[ III. தூலதேக சுத்தி ]

தன் உடல் தலைகீழாகவும், கால்கள் மேலாகவும் உள்ள தாகக் கருதி, அவ்வுடலையே, மேலே வேர்களும் கீழே கிளைகளும் உடைய ஒரு ஆலமரமாகவும் கருதுக.

A. பிருதிவி தத்துவசோதனை :

வலக்கையில் ஒரு பத்திரமோ அல்லது புஷ்பமோ எடுத்து வைத்துக்கொண்டு, பெருவிரலால் வலமூக்கை அழுத்தி, வாயுவை இடமூக்கினால் உள்ளே இழுத்துக் கொண்டு,

ஓம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் நிவிர்த்தி கலாயை ஹ : ஹூம்பட் என்று உச்சரித்து, அவ்வாயுவை

மெல்ல மெல்ல மேலே சுழுமுன நாடி வழியாகத் துவாத சாந்தம் வரையும் கொண்டு போய், "பிருதிவி தத்துவ சோதனை செய்கின்றேன்" S என்று கூறிக்கொண்டு வாயுவை வலமூக்கினுல் வெளியே விடுக.

பின்பு கையிலுள்ள பத்திர புஷ்பத்தை முழங்கால் முதல் நாபி, மார்பு, நெற்றி, சிரசு, துவாதசாந்தம் வரையும் பாவனையாகத் தொட்டுக்கொண்டு போய்ச் சோடிகை முத்திரையோடு தனது பின் பக்கம் எறிந்து விடுக.

## B. அப்பு தத்துவசோதனை :

மீட்டும் வலக்கையில் பத்திர புஷ்பம் வைத்துக் கொண்டு பெருவிரலால் வலமூக்கை அழுத்தி, வாயுவை இடமூக்கினுல் உள்ளே இழுத்துக்கொண்டு,

ஓம் ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் பிரதிஷ்டா கலாயை ஹ: ஹூம்பட் என்று உச்சரித்து, அவ்வாயுவை மெல்ல மெல்ல மேலே சுழுமுனை நாடி வழியாகத் துவாத சாந்தம் வரையும் கொண்டு போய், "அப்பு தத்துவ சோதனை செய்கின்றேன்" T என்று கூறிக்கொண்டு வாயுவை வல மூக்கினுல் வெளியே விடுக.

பிறகு, கையிலுள்ள பத்திர புஷ்பத்தை நாபி முதல் மார்பு, நெற்றி, சிரசு, துவாதசாந்தம் வரையும் பாவனை யாகத் தொட்டுக் கொண்டு போய்ச் சோடிகை முத்திரை யோடு தனது பின் பக்கம் எறிந்துவிடுக.

## C. தேயு தத்துவசோதனை :

மீட்டும் வலக்கையில் பத்திர புஷ்பம் வைத்துக் கொண்டு பெருவிரலால் வலமூக்கை அழுத்தி வாயுவை இடமூக்கினுல் உள்ளே இழுத்துக்கொண்டு,

---

S. இதனுல் முழங்கால் முதல் பாதம் வரையில் நிகழும் நிவர்த்தி கலையிலுள்ள, பிருதிவி தத்துவத்தின் கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம் என்ற ஐந்து குணங்களும் நீங்க அப்பிருதிவி தத்துவம் வாயுவில் ஒடுங்கி உலர்ந்து விடுவதாகக் கருதுக.

T இதனுல் நாபி முதல் முழங்கால் வரையில் விளங்கும் பிரதிஷ்டா கலையி லுள்ள அப்பு தத்துவத்தின் ரசம், ரூபம், பரிசம், சத்தம் என்ற நான்கு குணங்களும் நீங்க, அந்த அப்புத் தத்துவம் தேயுவில் ஒடுங்கி உலர்ந்துவிடுவதாகக் கருதுக.

ஓம் ஹ்ராம் ஹ்ரும் ஹ்ரூம் வித்யா கலாயை ஹ : ஹூம்பட் என்று உச்சரித்து அவ்வாயுவை மெல்ல மெல்ல மேலே சுழுமுன நாடிவழியாகத் துவாதசாந்தம் வரையும் கொண்டு போய், ''தேயு தத்துவசோதனை செய்கின்றேன்''[ss] என்று கூறிக் கொண்டு வாயுவை வலமூக்கினுல் வெளியே விடுக.

பின்பு, கையிலுள்ள பத்திர புஷ்பத்தை மார்பு முதல் நெற்றி, சிரசு, துவாதசாந்தம் வரையும் பாவனையாகத் தொட்டுக் கொண்டு போய்ச் சோடிகை முத்திரையோடு தனது பின் பக்கம் எறிந்து விடுக.

## D. வாயு தத்துவசோதனை :

மீட்டும் வலக்கையில் பத்திர புஷ்பம் வைத்துக் கொண்டு பெருவிரலால் வலமூக்கை அழுத்தி வாயுவை இடமூக்கினுல் உள்ளே இழுத்துக்கொண்டு,

ஓம் ஹைம் ஹைம் சாந்தி கலாயை ஹ : ஹூம் பட் : என்று உச்சரித்து அவ்வாயுவை மெல்ல மெல்ல மேலே சுழு முன நாடிவழியாகத் துவாதசாந்தம் வரையும் கொண்டு போய், ''வாயு தத்துவ சோதனை செய்கின்றேன்''[TT] என்று கூறிக்கொண்டு வாயுவை வல மூக்கினுல் வெளியே விடுக.

பின்பு கையிலுள்ள பத்திர புஷ்பத்தை நெற்றி முதல் சிரசு, துவாதசாந்தம் வரையும் பாவனையாகத் தொட்டுக் கொண்டுபோய்ச் சோடிகை முத்திரையோடு தனது பின் பக்கம் எறிந்து விடுக.

## E. ஆகாய தத்துவசோதனை :

மீட்டும் வலக்கையில் பத்திர புஷ்பம் வைத்துக் கொண்டு பெருவிரலால் வலமூக்கை அழுத்தி வாயுவை இடமூக்கினுல் உள்ளே இழுத்துக்கொண்டு.

---

[ss] இதனுல் மார்பு முதல் நாபிவரையில் திகழும் வித்தியா கலையிலுள்ள தேயு தத்துவத்தின் ரூபம், பரிசம், சத்தம் என்ற மூன்று குணங்களும் நீங்க, அத்தேயு தத்துவம் அப்புவில் ஒடுங்கி உலர்ந்து விடுவதாகக் கருதுக.

[TT] இதனுல் நெற்றி முதல் மார்பு வரையில் விளங்கும் சாந்தி கலையிலுள்ள வாயுதத்துவத்தின் பரிசம், கந்தம் என்ற இரண்டு குணங்களும் நீங்க, அந்தவாயு பிருதிவியில் ஒடுங்கி உலர்ந்து விடுவதாகக் கருதுக.

ஓம் ஹௌம் சாங்யதீத கலாயை ஹ: ஹூம் பட் என்று உச்சரித்து, அவ்வாயுவை மெல்ல மேலே சுழு முனை நாடிவழியாகத் துவாத சாந்தத்தில் கொண்டு போய், 'ஆகாய தத்துவசோதனை செய்கின்றேன்'**என்று கூறிக்கொண்டு வாயுவை வலமூக்கினால் வெளியே விடுக.

பிறகு, கையிலுள்ள பத்திர புஷ்பத்தைச் சிரசிலும் துவாத சாந்தத்திலும் பாவனையாகத் தொட்டுச் சோடிகை முத்திரையோடு தனது பின்பக்கம் எறிந்து விடுக.

[இவ்வாறு பஞ்ச பூதங்களை ஒடுக்குங் கிரியையால் தூலதேகமாகிய ஆலமரம் உலர்ந்ததாகக் கருதவேண்டும்.] பின்னர்,

## F. பஞ்சபூதகுண தகனமும்--அமிர்தாபிஷேகமும் :

ஓம் ஹ : அஸ்த்ராய ஹூம் பட் என்று வலக்கால் பெருவிரலினின்று காலாக்கினியை எழுப்ப, அதனால் ஆலமரமாகப் பாவித்த தூல உடலைச்சார்ந்த பிருதிவி முதலிய பஞ்சபூதகுண குற்றங்கள் அனைத்தும் எரிந்து மலபந்தங்கள் நீங்கியதாகவும், நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகள் மட்டும் பழுதில்லாமல் நின்றதாகவும் கருதுக. பிறகு,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று துவாத சாந்தத்திலுள்ள சத்தி மண்டலத்தினின்றும் பெருகும் அமிர்ததாரைகளினால் தூல உடலின் உள்ளும் புறமும் நனைந்ததாக எண்ணுக. அதன்பின்பு,

## G. ஆன்ம ஸ்தாபனம் ;

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம : என்று இருதய தாமரையில் சூக்கும வுடல் வந்ததாக நினைத்து, அதனிடத்தில் முன்னர் துவாத சாந்தத்தில் கொண்டுபோய்ச் சிவனுடன் சேர்த்த ஆன்மாவை (சிவமாகிய ஆன்மாவை)ச் சங்கார முத்திரை கொண்டு,

** இசனல் சிரசு முதல் நெற்றி வரையில் திகழும் சாந்திய தீதகலையிலுள்ள ஆகாய தத்துவத்தின் சத்தம் என்ற ஒரு குணம் நீங்க, அந்த ஆகாய தத்துவம் பரமாகாசத்தில் ஒடுங்கி உலர்ந்து விடுவதாகக் கருதுக.

ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மநே நம : என்று கிரகித்து சுழுமுனை நாடிவழியாக இருதயத்தில் கொண்டுவந்து தாபித்ததாகப் பாவித்து, அந்த ஆன்மாவை ஒளி வடி வினனாகக் கருதி,

ஓம் ஹெளம் சக்தியே ஹெளஷட் என்று சக்திமண்டல அமிர்த தாரைகளினால் அபிஷேகம் ஆனதாகப் பாவிக்க.

பிறகு, அங்க சுத்தி, அங்க நியாசம் ஆகிய இவற்றைச் செய்க.

[இதுவரையும் உள்ளவை பூதசுத்திக் கிரியை ஆகும்.]

## 8. அந்தரியாகம் *

[A. உட்பூசை B. அக்கினி காரியம் C. சிவோகம் பாவனை]

### A. உட்பூசை (அகப்பூசை):

முதலில் தம் இருகண்களையும் மூடிக்கொண்டு மௌன நிலையில் இருந்து, சூரிய மண்டலம் என்னும் இருதய தாமரை யின்கண் ஆதார சத்தி முதல் குடிலா சத்தி வரையுமுள்ள திராசன பூசை Sயையேனும் அல்லது,

ஓம் ஹாம் அநந்தாய நம:, ஓம் ஹாம் தர்மாய நம:, ஓம் ஹாம் க்ஞானாய நம: ஓம் ஹாம் வைராக்யாய நம:, ஓம் ஹாம் ஐசுவர்யாய நம:, ஓம் ஹாம் பத்மாய நம: என்ற சடுத்தாசன பூசையையேனும் மனத்தினால் பூசித்து, அதில் சோதி லிங்கப் பெருமான் எழுந்தருளியதாகக் கருதி அவரை,

ஓம் ஹாம் சிவாசநாய நம:, ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவ மூர்த்தயே நம:, ஓம் ஹாம் ஹெளம் சிவாய நம:, ஓம் ஹாம் ஹெளம் வித்யாதேஹாய நம:, ஓம் ஹெளம் நேத்ரேப்யோ நம: என்ற ஆசனம், மூர்த்தி, மூலம், வித்தியா தேகம், நேத்திர மந்திரங்களால் மானதமாகப் பூசித்து,

ஓம் ஹாம் சக்தயே வெளஷட் என்று சக்தி அமிர்தத் தால் பாவனாபிஷேகம் செய்து, அன்பு என்ற திருவொற் றுடை ஒற்றி, வைராக்கியம் என்ற சந்தனம் புஷ்பம்

* இது பொதுவாக உட்பூசை எனப் பெயர் பெறும். S இத்திராசன பூசை முறையினை இந்நூல் சிவபூசைப் பகுதி 16-வது தலைப்பில் காண்க.

முதலியவற்றைச் சாத்தி, மனத்தால் தூபதீபங் காட்டி, ஆன்மாவை நைவேத்தியம் செய்து, அருள் என்ற அர்க்கியம் கொடுத்து, தனது, "கொல்லாமை. ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம். அன்பு" என்னும் ஞான அஷ்ட புஷ்பங்களைத் திருவடிகளில் சமர்ப்பித்து, அறிவு என்ற ஞான தீபத்தைக் காட்டிப் பிரதட்சிணம், நமஸ்காரம் ஆகிய இவற்றைப் பாவனையாகச் செய்க.

B. அக்கினி காரியம்:

பிறகு, அக்கினி மண்டலம் என்னும் நாபித் தாமரையாகிய ஓம குண்டத்தில் இயல்பாய்ச் சொலிக்கும் அக்கினியில் முன்போல் ஆசனம், மூர்த்தி, மூலம், வித்தியா தேகம், நேத்திரம் முதலியவற்றால் சிவனை மனத்தால் பூசித்து, அந்த அக்கினியைச் சிவாக்கினியாகக் கருதி,

ஓம் ஹாம் சக்தயே வௌஷட் என்று பிந்து (புருவநடு) விலிருந்து பெருகும் அமிர்தமாகிய நெய்யை,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய-ஸ்வாஹா என்று மனத்தால் 108-ஆகுதி (அல்லது 21-ஆகுதி) பண்ணி, வணங்கி உட்பூசையினைச் சிவப்பிரீதியாகச் செய்க.

C. சிவோகம்பாவனை -(சமாதி):

அதன்பிறகு, சந்திரமண்டலமாகிய புருவ நடுவின்கண் மிக வெள்ளிய நட்சத்திரம் போல் ஒளிவீசும் நிட்கள சிவத்தைச்சுழுமுனை நாடிவழியாகத் தியானித்து,

தனது சிரசில் ஒரு புஷ்பம் வைத்துக்கொண்டு, "சிவனே யான்", "சிவோகம்" என்று மௌன நிலையில் மனத்தை நிஷ்டையில் சிறிதுநேரம் நிறுத்தி,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று 21-தரம் மானதமாகச் செபித்து வணங்கி, இறைவனிடம் "புறப் பூசை (வெளிப்பூசை)யினைச் செய்கின்றேன்" என்று வேண்டி அநுமதி பெற்றதாகக் கருதுக.

[இதுவரையும் அந்தரியாக பூசை ஆகும்.]

## 9. தானசுத்தி

ஓம் ஹ: அஸ்த்ராயபட் என்று பூசாத்தானத்தில், தாளத்திரயம் செய்து,

ஓம் ஹ: அஸ்த்ராய ஹூம்பட் என்று சோடிகை முத்திரையினுல் பூசாத்தானத்திற்கு எட்டுத் திக்கிலும் திக்குப் பந்தனம் செய்து, அங்குள்ள இடையூறுகளைப்போக்கி, நான்கு பக்கங்களிலும் அக்கினிச் சுவாலையோடு கூடிய ஒரு கோட்டையும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று நீட்டிய சுட்டுவிரலால் மூன்றுமுறை வலமாகச் சுற்றுதலாகிய அவகுண்டனம் செய்து, அங்கு மூன்று அகழியும் உண்டானதாகப் பாவித்து,

ஓம் ஹாம் ஹௌம் சக்தயே வௌஷட் என்று மேலும் கீழும் தேனுமுத்திரை காட்டிச் சத்தியாகிய வலை ஆகாயத்திலும், பூமியிலும் அமைந்ததாக நினைத்துச் சகல பாதுகாப்பும் உண்டானதாகப் பாவிக்க.

## 10. விசேஷார்க்கியம் (சிவார்க்கியம்)

ஓம் ஹ: அஸ்த்ராய பட் என்று விசேஷார்க்கிய வட்டகையினைச் சலத்தினுல் அலம்பி,

ஓம் ஹாம் ஹ்ருதயாய வௌஷட் என்று அபிஷேக கலசத்தில் சலங்கொண்டு, அதனை இரண்டு கைகளினுலும் புருவ நடுவரையும் உயர்த்திக்கொண்டுபோய், புருவ நடுவிலுள்ள அமிர்தம் அச்சலத்தில் கலந்ததாகப் பாவித்து, அக்கலசத்தை இறக்கிக்கொண்டு வந்து தன் முன்னே வைக்கப்பெற்றிருக்கும் சுத்தமான விசேஷார்க்கிய வட்டகையில் ஊற்றி அதன்கண்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று சந்தனம், புஷ்பம், அறுகு, அட்சதை, பால், தருப்பைநுனி முதலியன இட்டு,

ஓம் ஹாம் சிவாசநாய நம:, ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவ மூர்த்தயே நம: என்ற ஆசன மூர்த்தி மந்திரங்களாலும்,

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம:, ஓம் ஹேம் தத்புருஷ வக்த்ராய நம:, ஓம் ஹூம் அகோர ஹ்ருதயாய நம:, ஓம் ஹிம் வாமதேவ குஹ்யாய நம:, ஓம் ஹம் சத்யோஜாத மூர்த்தயே நம: என்ற பஞ்சப்பிரம மந்திரத்தாலும், ஓம் ஹாம் ஹௌம் வித்யாதேகாய நம: என்ற வித்தியா தேக மந்திரத்தாலும், ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நம: என்ற நேத்திர மந்திரத் தாலும், ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்ற சிவமூல மந் திரத்தாலும், ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: ஓம் ஹீம் சிரசே நம: ஓம் ஹூம் சிகாயை நம: ஓம் ஹைம் கவசாய நம: ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்ற நேத்திர மொழிந்த அங்க பஞ்சக மந்திரத்தாலும், மீட்டும் ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்ற சிவமூல மந்திரத்தாலும் (ஆக 16 மந்திரங்களாலும்) பூசித்து,

ஓம் ஹைம் கவசாய நம: என்று பெருவிரல் மடக்கிய வலக்கையினால் மூடி (அப்பியுட்சணம் செய்து),

பஞ்சப்பிரமம். ஷடங்கம் ஆகிய சங்கிதா மந்திரம் பதினொன்றாலும் அபிமந்திரித்து.

ஓம் ஹ: அஸ்த்ராயபட் என்று சோடிகை முத்திரையினால் திக்குப் பந்தனமும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று நீட்டிய சுட்டுவிரலால் வலமாக அவகுண்டனமும் செய்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று தேனு முத் திரை அளிக்கவும். பிறகு,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று ஒரு புஷ்பத்தால் விசேஷார்க்கிய சலத்தைத் தொட்டுத் தன் சிரசில் புரோட் சித்துக்கொள்க. அதன்பின்னர்,

## 11. திரவிய சுத்தி

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று மீட்டும் ஒரு புஷ்பத் தால் விசேஷார்க்கிய சலத்தைத் தொட்டுப் பூசைத் தானம், பத்திர புஷ்பம் முதலான பூசாத் திரவியங்கள் முதலியவற்றைப் புரோட்சித்து,

ஓம் ஹைம் கவசாய நம: என்று பத்திர புஷ்பம் முதலான திரவியங்களை அப்பியுட்சணம் செய்து (வலக்கையால் மூடி),

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று பத்துத்தரம் அபிமந்திரித்து,

ஓம் ஹ: அஸ்த்ராயபட் என்று சோடிகை முத்திரையினால் திக்குப் பந்தனமும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று அவகுண்டனமும் செய்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று தேனு முத்திரை கொடுக்கவும்.

அதன்பின்னர், ஒரு புஷ்பத்தை விசேஷார்க்கிய சலத்தில் நனைத்து,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று திருமஞ்சனம் உள்ள பாத்திரத்தில் போட்டு,

ஓம் ஹைம் கவசாய நம: என்று திருமஞ்சனப் பாத்திரத்தை அப்பியுட்சணம் செய்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று பத்துத் தரம் அபிமந்திரித்து,

ஓம் ஹ: அஸ்த்ராயபட் என்று திக்குப்பந்தனமும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று அவகுண்டனமும் செய்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று தேனு முத்திரை அளிக்கவும்.

பிறகு, அபிஷேகக் கலசத்தில் இருக்கும் சலத்தைத் திருமஞ்சனப் பாத்திரத்தில்,

ஓம் ஹாம் கங்காயை நம: என்று விட்டு முகந்து வைக்கவும்.

## 12. ஆத்ம பூசை

ஓம் ஹாம் சிவாசநாய நம: என்று தான் இருக்கும் ஆசனத்திலே ஒரு புஷபம் வைத்து,

ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம : என்று மூர்த்திக்குத் தனது மார்பில் சந்தனத்துடன் ஒரு புஷ்பம் (அல்லது பத்திரம்) வைத்து,

ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நம : என்று தனது நெற்றியில் சந்தனப்பொட்டு (யானைக்கண் அளவு) இட்டு,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம : என்று தன் சிரசில் ஒரு புஷ்பம் வைத்துத் தன்னைச் சிவவடிவாகப் பாவிக்க.

## 13. மந்திரசுத்தி

மௌன நிலையில் மார்பில் இருகைகளையும் கூப்பிக் கொண்டு பஞ்சப்பிரமம், ஷடங்கம் ஆகிய சங்கிதா மந்திரம் பதினொன்றை ஒருமுறையும்,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம : என்னும் பிராசாத மந்திரத்தை (சிவமூல மந்திரத்தை)ப் பத்து முறையும் நாக்கு, பல், உதடு இவற்றின் உதவியின்றி மானதமாக (உயர்த்தியும், தாழ்த்தியும், நீட்டியும் உச்சரிக்க வேண்டிய முறைப்படி) உச்சரிக்கவும்.

## 14. இலிங்கசுத்தி

### A. உடையவர் பூசை (இட்டலிங்க பூசை) :

மணி, படிகம், பாணம், கல் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றை இட்டலிங்கமாக வைத்துப் பூசிப்பவர், ஸ்நான வேதிகையின் மேல் விரிக்கப்பெற்ற (ரிஷப வடிவம் எழுதிய) ஒரு சிறு பரிவட்டத்தின் நடுவிலும், அதன் அக்கினி, நிருதி, வாயு, ஈசானம் ஆகிய திசைகளிலும், மீட்டும் அதன் நடுவிலும் முறையே,

ஓம் ஹாம் அநந்தாய நம :, ஓம் ஹாம் தர்மாய நம :, ஓம் ஹாம் க்ஞாநாய நம :, ஓம் ஹாம் வைராக்யாய நம :, ஓம் ஹாம் ஐசுவர்யாய நம :, ஓம் ஹாம் பத்மாய நம : என்று சடுத்தாசனம் பூசித்து, அதன்பின் சிவலிங்கப் பெருமான் எழுந்தருளிய பெட்டகக் கோயிலில், (பூசைப்பெட்டியில்)

ஓம் ஹாம் பீம ருத்ராய நம: என்று பீம ருத்திரர்களைப் பூசித்துப் பெட்டகக் கோயிலைத் திறந்து, சிவலிங்கப் பெருமானை ஸ்நான வேதிகையில் எழுந்தருளச் செய்து,

ஓம் ஹாம் சிவாசநாய நம:, ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவ மூர்த்தயே நம:, ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம:, ஓம் ஹாம் ஹ்ருதயாய நம:, ஓம் ஹீம் சிரசே நம:, ஓம் ஹூம் சிகாயை நம:, ஓம் ஹைம் கவசாய நம:, ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்ற அஷ்டபுஷ்ப மந்திரத்தாலும்,

ஓம் தந்மஹேசாய வித்மஹே வாகவிசுத்தாய தீமஹி தந்நோ சிவ ப்ரசோதயாத் என்ற சிவகாயத்திரி மந்திரத்தாலும் ஒரு முறை அருச்சித்து,

சிவலிங்கப் பெருமானின் சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசானம் என்ற ஐந்து சிரசுகளிலும்.

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஸ்வாஹா என்று சாமானியார்க்கியம் அளித்து,

சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசானம் என்ற ஐந்து முகங்களிலும் முறையே நம: அந்தமாகச் சத்யோசாதாதி பஞ்சப்பிரம மந்திரங்களால் பூசித்து, அதன்படியே ஸ்வாஹா அந்தமாகச் சத்யோசாதாதி பஞ்சப்பிரம மந்திரங்களால் ஐந்து முகங்களுக்கும் விசேஷார்க்கியம் கொடுத்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய தூபம் ஸ்வாஹா, ஓம் ஹௌம் நேத்ரேப்யோ. தீபம் ஸ்வாஹா என்று தூபதீபங் காட்டி,

முன் செய்திருக்கும் பூசையின் மேல் — சிவலிங்கப் பெருமான் சிரசின்மேல் கையை வைத்து, நம: அந்தமான சத்யோசாதாதி பஞ்சப் பிரம மந்திரங்களைச் செபித்து, அதன்பின்,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று முன்னர் நடுவிரல் சுட்டு விரல்களால் நிர்மாலியம் ஒன்றை இடுக்கி எடுத்து, அதன்பின்னர், பெருவிரல் அணிவிரல்களால்

(திவ்ய முத்திரையால்) நிர்மாலியம் யாவும் கழித்து, அதனைச் சுத்தமான பாத்திரத்தில் எடுத்து ஈசானதிக்கில்,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று சண்டேசுவர பூசையின் பொருட்டு வைக்கவும். பின்பு, சுவாமியின் மீது உள்ள வஸ்திரம், ஆபரணம் முதலியவற்றைக் களைந்து, தனியே வைக்கவும்.

[அபிஷேகம் முடியும் வரையும் சிவபெருமான் சிரசின் மீது புஷ்பம் இருத்தல் வேண்டும். ஆதலால், திவ்ய முத்திரைகொண்டு ஒரு புஷ்பம் அல்லது வில்வம், பத்திரம் சிவபெருமான் சிரசில் வைக்கவும்.] அதன் பின்பு,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று சிவலிங்கத்தையும் (உருத்திரநாபத்தையும்),

ஓம் சிலீம் பம் சும் ஹூம்பட் பாசுபதாஸ்த்ராய நம: என்று ஆவுடையாளையும் சுத்தமாக அலம்பி,

ஓம் ஹ: அஸ்த்ராய ஸ்வாஹா என்று சிறிது சாமானியார்க்கிய நீரால் அபிஷேகித்து,

அஷ்டபுஷ்ப மந்திரத்தாலேனும் அல்லது ஆசனம், மூர்த்தி, மூல மந்திரங்களாலேனும் அருச்சித்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஸ்வாஹா என்று சிரசிலே விசேஷார்க்கியம் அளித்துத் தூபதீபம் சமர்ப்பித்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஸ்வாஹா என்று எண்ணெய்க் காப்பு, மாக்காப்பு, மஞ்சட் காப்பு, நெல்லிக் காப்பு, பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம், பால், தயிர், நெய் S தேன், கருப்பஞ்சாறு, சர்க்கரை, பழவகைச் சாறு, அன்னம், இளநீர், சந்தனக் குழம்பு ஆகிய இவற்றால் (அல்லது கிடைத்தவற்றால்) அபிஷேகித்து, இடையிடையே சுத்த சலத்தாலும், அபிஷேகம்பண்ணி, அஷ்ட புஷ்ப மந்திரத்தால் பூசித்துத் தூபதீபங் காட்டி,

ஓம் ஹைம் கவசாய நம: என்று சுவாமி, ஆவுடையாள் இவற்றில் குச்சுப்புல் சாத்தி அழுக்குகளை எடுத்து, நன்றாகச் சுத்த சலத்தால் அபிஷேகம் செய்க.

---

S நெய் அபிஷேகம் செய்ததும் இளவெந்நீர் அபிஷேகம் செய்தல் வேண்டும்

அதன்பின்னர், வலக்கையின் ஐந்து விரல்களை நீட்டிப் பிடித்தலாகிய பதாகை முத்திரையினுல் ஸ்வாஹா அந்தமான சிவமூல மந்திரத்தாலும், ஸ்வாஹா அந்தமான ஈசனுதி பஞ்சப்பிரம இருதயாதி ஷடங்க மந்திரங்களாலும், "வியோம வியாபி" என்று தொடங்கும் பத மந்திரம் எண்பத்தொன்றுலும் சுத்த சலத்தால் அபிஷேகித்து, சகஸ்ரதாரை, கோச்சிருங்கம், சங்கு இவற்ருலும் சுத்த நீரை அபிஷேகித்து, இறுதியாக,

ஓம் ஹாம் ஹ்ருதயாய ஸ்வாஹா என்று விசேஷார்க்கியத்தால் அபிஷேகித்து, அஷ்ட புஷ்ப மந்திரத்தால் பூசித்து, தூபதீபங்கொடுத்து, ஸ்வதா அந்தமான சிவமூலத்தால் ஆசமனமும், ஸ்வாஹா அந்தமான சிவமூலத்தால்அர்க்கியமும் அளித்து, சிவ மூலத்தால் பழம் முதலியவற்றை வைத்து நைவேத்தியம் செய்க.

ஓம் ஹைம் கவசாய நம : என்று திருவொற்ருடையால் மெல்ல துடைத்து,

ஓம் ஹ: அஸ்த்ராய நம : என்று சுவாமி சிரசில் ஒரு புஷ்பம் சாத்தி,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம : என்று ஸ்நான வேதிகையிலிருந்து எம்பெருமானைப் பூசா பீடத்தில் எழுந்தருளச் செய்து. பரிவட்டம், ஆபரணம் முதலியன சாத்தி, விபூதி, சந்தனம் புஷ்பம் சாத்தவும்.

[இவை யாவும் இட்டலிங்க பூசைக்குரியன.]

## B. க்ஷணிகலிங்க பூசை :

மந்திர சுத்தி முடிந்ததும் க்ஷணிகலிங்க பூசை உடையவர்கள்,

தனது ஆசாரியரிடத்தில் பெற்ற க்ஷணிகலிங்க வகைகளில், சந்தனத்தையேனும் அல்லது வேறு குறிப்பிட்ட பொருள்களில் ஏதேனும் ஒன்றையேனும் ஒரு பத்திரத்தில் அமைத்து, அதன்பின் சுவாமியை எழுந்தருளச் செய்யும் பீடத்தின் மேல் (பரிவட்டம் விரிக்கப் பெற்ற இடத்தில்) சடுத்தாசனம் பூசித்து, அங்கே க்ஷணிகலிங்கத்தை எடுத்துப் பக்தியுடன் வைத்து,

ஓம் ஹ : அஸ்த்ராய நம : என்று விசேடார்க்கிய சலத்தால் புரோட்சித்து, சிவ காயத்திரி மந்திரத்தை ஒருமுறை சொல்லிப் பூசித்து,

ஓம் ஹைம் கவசாய நம : என்று க்ஷணிகலிங்கப் பெருமான் மீது விபூதி, சந்தனம், புஷ்பம் முதலியன சாத்தவும்,*அதன் பின்னர்,

## 15. கணபதி, இலட்சுமி

### சதாசிவாதி சப்த குரு பூசை

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று சுவாமி பீடத்தின் வடக்குப் பாகத்தில் சாமானியார்க்கிய சலத்தால் புரோசித்து,

ஓம் ஹாம் மகாகணபதயே நம : என்று சுவாமி பீடத்தின் வடமேற்கில் தென்முகமாகக் கணபதியையும்,

ஓம் ஹாம் மகாலட்சுமியை நம: என்று கணபதிக்குக் கீழ்ப்பகுதியில் தெற்கு முகமாக இலட்சுமியையும் பூசித்து, அதன்பின்,

ஓம் ஹாம் சதாசிவ குரவே நம :, ஓம் ஹாம் அநந்த குரவே நம :, ஓம் ஹாம் ஸ்ரீகண்ட குரவே நம :, ஓம் ஹாம் அம்பிகா குரவே நம : ஒம் ஹாம் ஸ்கந்த குரவே நம :, ஓம் ஹாம் விஷ்ணு குரவே நம :, ஓம் ஹாம் ப்ரஹ்ம குரவே நம: என்று வடகிழக்குத் தொடங்கி மேற்கு இலட்சுமி வரையும் தென்முகமாகச் சதாசிவாதி சப்த குருவையும் பூசித்து, சந்தனம், புஷ்பம் சாத்தி,

ஓம் ஹாம் மகாகணபதி மகாலட்சுமி சதாசிவாதி சப்த குரவே ஸ்வாஹா என்று ஒன்பதின்மர்களுக்கும் சாமானியார்க்கியம் அளித்து, நைவேத்தியம் செய்து,

ஷ மந்திரத்தால் தூபம் ஸ்வாஹா, தீபம் ஸ்வாஹா என்று தூபதீபங் காட்டி, குருபாதுகைகளை வணங்கி,

* "பஞ்சசுத்தி செய்து நின்னைப் பாவித்துப் பூசை செய்தால், விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே" என்றதனல், பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி: இலிங்கசுத்தி என்ற இந்த ஐந்து சுத்தி உடையவராகச் சிவனைப் பூசித்தல் வேண்டும் என்பதாம்.]

" குருமூர்த்திகளே! உங்கள் அனுமதி பெற்று, அடியவன் இயன்றவாறு திரவியங்கொண்டு சிவனைப் பூசிக்கின்றேன்" என்று பிரார்த்தித்து, அனுமதி பெற்ற தாகக் கருதுக. பின்பு,

## 16. திராசன பூசை—சிவாசன பூசை *

43

ஓம் ஹாம் ஆதார சக்தயே நம: என்று சிவலிங்க பீடத்தின் கீழ்ப்பகுதியிலும்,

ஓம் ஹாம் அநந்தாசநாய நம:, ஓம் ஹாம் அநந்தாய நம: என்று பீடத்திலும் பூசித்து,

ஓம் ஹாம் தர்மாய நம:, ஓம் ஹாம் க்ஞாநாய நம:, ஓம் ஹாம் வைராக்யாய நம:, ஓம் ஹாம் ஐசுவரியாய நம: என்று பீடத்தின் அக்கினி, நிருதி, வாயு, ஈசான மூலைகளில் முறையே பூசித்து,

ஓம் ஹாம் அதர்மாய நம:, ஓம் ஹாம் அக்ஞாநாய நம:, ஓம் ஹாம் அவைராக்யாய நம:, ஓம் ஹாம் அநைசுவர்யாய நம: என்று பீடத்தின் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்குத் திக்குகளில் முறையே பூசித்து,

ஓம் ஹாம் அதச்சதநாய நம: என்று பீடத்தின் நிருதி திக்கிலும்,

ஓம் ஹாம் ஊர்த்வச்சதநாய நம: என்று பீடத்தின் ஈசான திக்கிலும் பூசித்து,

ஓம் ஹாம் கந்தாய நம:, ஓம் ஹாம் பீஜாய நம:, ஓம் ஹாம் அங்குராய நம:, ஓம் ஹாம் நாளாய நம:, ஓம் ஹாம் கண்டகேப்யோ நம: என்று பீடத்தின் நடுவிலும்

*ஓம் ஹாம் தளேப்யோ நம:, ஓம் ஹாம் கேசரேப்யோ நம:, ஓம் ஹாம் கர்ணிகாயை நம:, ஓம் ஹாம் பீஜேப்யோ நம:, ஓம் ஹாம் பத்மாய நம:* என்று இலிங்கத்தின் அடியிலும் பூசித்து,

*ஓம் ஹாம் வாமாயை நம:, ஓம் ஹாம் ஜ்யேஷ்டாயை நம:, ஓம் ஹாம் ரௌத்ரியை நம:, ஓம் ஹாம் காள்யை நம:,*

---

* இஃது ஆதார சக்தி முதல் குடிலா சக்தி வரையும் உள்ள பூசை ஆகும்.

ஓம் ஹாம் கலவி கரண்யை நம:, ஓம் ஹாம் பலவி கரண்யை நம:, ஓம் ஹாம் பலப்ரமதிந்யை நம:, ஓம் ஹாம் ஸர்வபூத தமந்யை நம: என்று அஷ்ட சத்திகளைப் பதுமத்தின் எட்டுக் கேசரங்களிலே கிழக்கு முதல் வடகிழக்கு வரையு முள்ள எட்டுத்திக்குகளிலும் முறையே பூசித்து,

ஓம் ஹாம் மநோந்மந்யை நம: என்று கர்ணிகைக்கு வடகிழக்கிலும் பூசித்து,

ஓம் ஹாம் ஸூர்ய மண்டலாய நம:, ஓம் ஹாம் ஸூர்ய மண்டலாதிபதயே ப்ரம்மணே நம: என்று தளநுனி வட்டத்திலும்,

ஓம் ஹாம் சோம மண்டலாய நம: ஓம் ஹாம் சோம மண்டலாதிபதயே விஷ்ணுவே நம: என்று கேசர நுனிவட்டத்திலும்,

ஓம் ஹாம் அக்நிமண்டலாய நம:, ஓம் ஹாம் அக்நிமண்டலாதிபதயே ருத்ராய நம: என்று கர்ணிகை நுனியிலும்,

ஓம் ஹாம் சக்திமண்டலாய நம:, ஓம் ஹாம் சக்தி மண்டலாதிபதயே ஈசுவராய நம: என்று கர்ணிகை மத்தியிலும் பூசித்து,

[இதுவரையும் திராசன பூசை ஆகும். அதன்மேல்]

## 17. ஆசனமூர்த்தி பூசை

ஓம் ஹாம் சிவாசநாய நம: என்று திராசனத்தின் மேல் சிவாசனத்தையும்,

ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்று சிவ மூர்த்தியைப் பூசித்து, இச்சிவமூர்த்தியை ஒளிவடிவாகவும், தண்டாகாரமாகவும், பிரியாத அவயவங்களையுடையதாகவும், சிவதத்துவ வடிவாகவும் நினைத்து இச் சோதிவடிவில் ஐந்து முகங்கள் முதலாய அவயவங்கள் உண்டானதாகப் பாவித்து,

## 18. தண்டபங்கி நியாசம் *

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம: என்று மூர்த்தியின் சிரசில் வலக்கைச் சுட்டுவிரலோடு கூடிய பெருவிரலாலும்,

* தண்டம்—சர்வாங்கம். பங்கி — தொகுதி.

ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய நம: என்று மூர்த்தியின் முகத்தில் பெருவிரலோடு கூடிய சுட்டுவிரலாலும்,

ஓம் ஹூம் அகோரஹ்ருதயாய நம: என்று மூர்த்தியின் மார்பில் பெருவிரலோடு கூடிய நடுவிரலாலும்,

ஓம் ஹிம் வாமதேவ குஹ்யாய நம: என்று மூர்த்தியின் நாபியில் பெருவிரலோடு கூடிய அணி விரலாலும்,

ஓம் ஹம் சத்யோசாத மூர்த்தயே நம: என்று மூர்த்தியின் முழந்தாள்களில் பெருவிரலோடு கூடிய சிறு விரலாலும் நியாசம் செய்க. பிறகு,

## 19. முண்டபங்கி நியாசம்(முண்டம்-சிரசு)

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம: என்று ஊர்த்துவ (வடகிழக்குச்) சிரசிலும்,

ஓம் ஹேம் தத்புருஷ மூர்த்தாய நம: என்று கிழக்குச் சிரசிலும்,

ஓம் ஹூம் அகோர மூர்த்தாய நம: என்று தெற்குச் சிரசிலும்,

ஓம் ஹிம் வாமதேவ மூர்த்தாய நம: என்று வடக்குச் சிரசிலும்,

ஓம் ஹம் சத்யோசாத மூர்த்தாய நம: என்று மேற்குச் சிரசிலும் வலக்கைச் சுட்டு விரலோடு கூடிய பெருவிரலால் நியாசம் செய்க. அதன்பிறகு,

## 20. வக்த்ர பங்கி நியாசம்

ஓம் ஹோம் ஈசான வக்த்ராய நம: என்று வடகிழக்குத் திருமுகத்திலும்,

ஓம் ஹேம் தத்புருஷ வக்த்ராய நம: என்று கிழக்குத்திரு முகத்திலும்,

ஓம் ஹூம் அகோர வக்த்ராய நம: என்று தெற்குத் திரு முகத்திலும்,

ஓம் ஹிம் வாமதேவ வக்த்ராய நம: என்று வடக்குத் திருமுகத்திலும்,

*ஓம் ஹம் சத்யோசாத வக்த்ராய நம:* என்று மேற்குத் திருமுகத்திலும் வலக்கைச் சுட்டு விரலோடு கூடிய பெரு விரலால் நியாசம் செய்க. பிறகு,

## 21. சதாசிவமூர்த்தித் தியானம்

பத்மாசனமும் ஐந்து திருமுகங்களும், திருமுகங்கள் தோறும் மூன்று கண்களும், பத்துத் திருக்கரங்களும் உடையவராய், ஈசான முகம் வெண்மை நிறமும், தத் புருஷமுகம் பொன்னிறமும், அகோர முகம் கறுப்பு நிற மும், வாமதேவமுகம் சிவப்பு நிறமும், சத்யோ சாதமுகம் மிக வெண்மை நிறமும் பெற்று, நாகாபரணமும், பூணூ லும், சடையும், பிறைச் சந்திரனும் தரித்தவராய், வலக்கை களில் பரசு, கட்கம், சூலம், வச்சிரம், அக்கினியும், இடக் கைகளில் அபயம், மணி, நாகம், பாசம், அங்குசமும் தாங் கியவராய்த் திகழும் சதாசிவ மூர்த்தியை மனத்திலே தியானித்து,

## 22. வித்தியா தேக நியாசம்

கைகளிலே நிறைய புஷ்பங்களை அஞ்சலியாக இரு தய தானத்திலே வைத்துக்கொண்டு, சதாசிவமூர்த்தி இலிங்க வடிவில் வந்ததாகக் கருதி,

*ஓம் ஹாம் ஹௌம் வித்யா தேஹாய நம:* என்று உச்ச ரித்து,

புஷ்பாஞ்சலியைப் பிரமரந்திரம்வரையும் மெல்லஉயர்த் திக்கொண்டு போய், சிவ தத்துவம் வரையும்வியாபகமான மின்னொளியோடு கூடிய வித்தியாதேகம் தனது புஷ்பாஞ் சலிக்குள்ளே வந்ததாகப் பாவித்து, பிறகு, இருதய ஸ்தா னத்திற்கு மெல்லென இறக்கிக்கொண்டு வந்து, சிவ லிங்கப்பெருமான் மீது சாத்தி,

ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நம: என்று ஈசானம் முத லிய ஐந்து திருமுகங்களிலும் தனித்தனியே வலக்கை நடு மூன்று விரல்களால் நேத்திரங்களை நியாசித்து, நேத் திரம் அளித்து,

## 23. ஆவாகனுதி

கைகளில் புஷ்பம் வைத்து அஞ்சலியாக இருதய தானத்தில் வைத்துக்கொண்டு,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று மெல்ல உச்சரித்து,

துவாத சாந்தத்தின் மேலே பிராசாத மந்திரப் பொருளாகிய அப் பரமசிவனை, நிட்கள வடிவாகவும், ஞானுனந்த வடிவாகவும், எங்கும் நிறைந்தவராகவும், யாவர்க்கும் தலைவராகவும் நினைத்து, அதன்பிறகு,

அப்புஷ்பாஞ்சலியைத் துவாத சாந்தம் வரையும் மெல்ல மேலே உயர்த்திக்கொண்டு போய், அங்கே சூரியப் பிரகாசம்போல் பேரொளி வீசுபவராகவும், பின்பு புஷ்பாஞ்சலியைப் புருவம் நடுவரையும் மெல்ல இறக்கி வந்து அங்கே கோடி சந்திரப் பிரகாசம்போல் ஒளி வீசுபவராகவும், அமிர்தத்தால் நனைந்த வெளுப்புடையவராகவும் நினைத்து,

அதன்பின், இறைவன் பிங்கலைநாடி (வலமூக்கு) வழியாக வெளியே வந்து புஷ்பாஞ்சலியுள் வந்ததாகப் பாவித்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று சிவலிங்கப்பெருமான் திருமுடியிலே இருகைகளாலும் புஷ்பத்தைச் சாத்தி,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று ஆவாகன முத்திரையால் ஆவாகனமும், அம்மந்திரங்கொண்டே ஸ்தாபனமுத்திரையால் ஸ்தானமும், சந்நிதான முத்திரையால் சந்நிதானமும், சந்நிரோதன முத்திரையால் சந்நிரோதனமும் * செய்து,

"மகாதேவதேவ! உங்கள் வரவு நல்வரவாகட்டும்" என்று உபசாரம் கூறியபோது, அதற்கு இறைவன், "குழந்தாய்! நீ விருத்தியடையக் கடவாய்; நாம் நலமாக

---

* ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம் இவற்றின் முத்திரைகளைச் சூரிய பூசைப் பகுதியின் 11வது தலைப்பில் காண்க.

எழுந்தருளி இருக்கின்றோம்; மகிழ்ச்சி" என்று பதில் அருளியதாகவும் நினைத்து,

"சர்வலோகநாயகராகிய சுவாமீ! சிறியேன் செய்யும் இப்பூசை முடியும் வரையும் இச்சிவலிங்கத்திலே பிரீதியோடு சாந்நித்தியமாக எழுந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய சுவாகதார்க்கியம் ஸ்வாஹா S என்று ஈசானம் முதலிய ஐந்து திருமுகங்களிலும் ஒவ்வோர் முறை விசேடார்க்கியத்தினுல் சுவாகதார்க்கியம் (வருகை அளிக்கும் உபசார அர்க்கியம்) கொடுத்து,

காள கர்ணிக முத்திரை1யும், இலிங்க முத்திரை2யும், நமஸ்கார முத்திரையும் சுவாமிக்குக் காட்டுக.

## 24. இருதயாதி நியாசம்

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று வலக்கைப் பெருவிரலோடு கூடிய சிறு விரலினுல் பாவனையாகச் சுவாமியின் இருதயத்திலும்,

ஓம் ஹீம் சிரசே நம: என்று பெருவிரலோடு கூடிய அணி விரலினுல் திருமுடியிலும்,

ஓம் ஹூம் சிகாயை நம: என்று பெருவிரலோடு கூடிய நடுவிரலினுல் திருச்சிகையிலும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று இரண்டு சுட்டு விரலினுல் திருக்கழுத்தைச்சுற்றி மார்பு நடுவரையிலும்,

ஓம் ஹ; அஸ்த்ராய நம: என்று வலக்கை அணிவிரலினுல் திருவுள்ளங்கைகளிலும் நியாசித்து.

---

S ஸ்வாஹா அந்தமான ஈசான மந்திரத்தாலும் சுவாக தார்க்கியம் கொடுக்கலாம் எனவும், ஆவாகனம் முதலிய நான்கையும் முறையே சாத்தியோசாதம், வாமதேவம், அகோரம் தத்புருஷத்தாலும் செய்யலாம் எனவும் சிவாகமம் கூறும். 1. காள கர்ணிக முத்திரை—இஃது, இரு கைகளின் விரல்களை உள்ளே பொருந்தும்படி குவித்துப் பெருவிரல்களை நிமிர்த்திப் பிடித்தல்.

2. இலிங்க முத்திரை- இது வலக்கை விரல்களை மடக்கிப் பெருவிரலை நிமிர்த்தி இடக்கைப் பெருவிரல் சுட்டுவிரல்களால் வலக்கைப் பெருவிரலின் கீழ் வளைத்துப் பிடித்து மற்றைய விரல்களை நீட்டிப்பிடித்தல்.

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று உயர்த்திய வலக்கைப் பெருவிரலையுடைய முஷ்டியினுல் ஏகத்துவம் (அதாவது ஒன்ருக இருக்கும் நிலையினைப்) பாவித்து,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று சோடிகை முத்திரையினுல் திக்குப்பந்தனமும்.

ஓம் ஹைம் கவசாய நம: என்று நீட்டிய சுட்டுவிரலால் அவகுண்டனமும்,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று தேனு முத்திரையும், மகா முத்திரை T யும் கொடுத்துப் பஞ்சமுகீ முத்திரை S யும் காட்டுக. பிறகு,

## 25. பாத்தி யாசமனார்க்கியம்

விசேடார்க்கிய வட்டகையை எடுத்து இடக்கையிலே வைத்துக் கொண்டு, வலக்கை மிருக முத்திரையினுலே,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று சுவாமியின் இரண்டு திருப்பாதங்களில் வலமிடமாக ஒவ்வொரு தரம் பாத்தியமும்,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஸ்வதா என்று ஈசானமுகம் முதலிய ஐந்து திருமுகங்களில் ஒவ்வொரு திருமுகத்திற்கும் மும்மூன்று தரமாக ஆசமனமும்,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஸ்வாஹா என்று ஈசானம் முதலாய ஐந்து திருமுடிகளில் ஒவ்வொரு திருமுடிக்கும் ஒவ்வொரு தரமாக அர்க்கியமும் கொடுக்க.

## 26. புஷ்பதானம்-தூப தீபம்

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று புஷ்பம், அறுகு, அட்சதைகளைச் சுவாமிக்குச் சாத்தி,

---

T. மகா முத்திரையினைச் சூரியபூசை 12-வது தலைப்பில் காண்க.

S. பஞ்சமுகீ முத்திரை—இஃது இருகைகளின் விரல்களை உட்புறமாகக் கோர்த்துச்சேர்த்து விரித்து, இடக்கை சிறு விரலின் மேல் வலக்கைப் பெருவிரலையும், வலக்கைச் சிறுவிரலின் மேல் இடக்கைப் பெருவிரலையும், இடக்கை நடுவிரலின்மேல் வலக்கைச்சுட்டு விரலையும், வலக்கை நடு விரலின்மேல் இடக்கைச்சுட்டு விரலையும் வைத்துப்பிடித்து நடுவில் இரண்டு மோதிர விரலையும் நிமிர்த்திச் சேர்த்துப் பிடித்தல்,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று இடக்கையினுல் மணியை அடித்துக் கொண்டு,

ஓம் ஹாம் ஹ்ருதயாய தூபம் ஸ்வாஹா என்று தூப*மும்,

ஓம் ஹௌம் நேத்ரேப்யோ தீபம் ஸ்வாஹா என்று தீபமும் கொடுத்து, முன்போல் ஆசமனமும் அர்க்கியமும் கொடுக்க. பிறகு,

## 27. பாவனுபிஷேகம்

[வலக்கைச் சிறுவிரலுக்கும் அணி விரலுக்கும் இடையே ஒரு புஷ்பம் இடுக்கிக் கொண்டு, சிவலிங்கப் பெருமான் திருமுடியிலுள்ள ஒரு புஷ்பத்தைப் பெருவிரல் சுட்டுவிரல்களினுலே,

ஓம் ஹ: அஸ்த்ராயபட் என்று எடுத்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று முன்னே விரல்களால் இடுக்கிய புதிய புஷ்பத்தைச் சுவாமி மீது சாத்திக் கை கழுவிக்கொண்டு,]

எண்ணெய்க் காப்பு, மாக்காப்பு, பால், இளநீர், சந்தனம் முதலிய அபிஷேகத் திரவியங்களை மானதமாகச் சங்கிதா மந்திரம் பதினொன்ருலும் புறம்பே சலம் விடுதலாகிய பாவனுபிஷேகம் செய்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று விசேடார்க்கிய சலத்தால் சுவாமி மீது புரோட்சித்து, முன்போல் பாத்தியம், ஆசமனம், அர்க்கியம் கொடுத்து,

ஓம் ஹைம் கவசாய நம: என்று மெல்லிய திருவொற்ருடையினைப் பாவனையாகச் சாத்தி (துடைத்து),

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று விபூதி சாத்துக.

## 28. சந்தனுதி அலங்காரம்

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று சந்தனம், அட்சதை, அறுகு, வில்வம், புஷ்பம் சாத்தி,

* அகோர மந்திரத்தாலும், சிவமூலமந்திரத்தாலும், தூபம் கொடுக்கலாம் என்பர்.

பொன்னரைஞாண், பொற்கௌபீனம், உபவீதம், குண்டலம், ஆபரணம், விசித்திர வஸ்திரம் முதலியன மனத்தால் பக்தியுடன் சுவாமிக்கு நிவேதித்து (அலங்கரித்து),

## 29. ஆத்ம தத்துவாதி புஷ்பாஞ்சலித் திரயம்

ஓம் ஹாம் ஹௌம் ஆத்ம தத்வாதிபதயே சிவாய நம:, ஓம் ஹாம் ஹௌம் வித்தியா தத்வாதிபதயே சிவாய நம:, ஓம் ஹாம் ஹௌம் சிவ தத்வாதிபதயே சிவாய நம: என்று கையில் புஷ்பம் வைத்துக் கும்பிட்டுச் சாத்திய பிறகு,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று அர்ச்சித்து, இண்டைமாலை முதலிய புஷ்ப மாலைகளைச் சாத்தி அலங்கரித்து,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று மணி அடித்துக் கொண்டு, முன்போல் தூபதீபம் கொடுத்து, ஆசமனம் அர்க்கியம் அளித்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று சிவபெருமான் திருமுடி ஐந்திற்கும் மனோரத முத்திரை S காட்டவும், பிறகு,

## 30. கௌரி பூசை

சுவாமிக்கு ஈசான திக்கிலே ஒரு பத்திரத்தில் சந்தனம் வைத்து, அதில் சடுத்தாசனம் பூசித்து,

ஓம் ஹ்ரீம் கௌரியாசநாய நம:, ஓம் ஹ்ரீம் கௌரி மூர்த்தயே நம:, ஓம் ஹ்ரீம் கௌர்யை நம: என்று கௌரி தேவியை ஆசன மூர்த்தி மூலங்களால் பூசித்து,

ஓம் ஹ்ரீம் கௌர்யை அர்க்கியம் ஸ்வாஹா என்று அர்க்கியம் கொடுத்து, சந்தனம் புஷ்பம் முதலியவற்றை,

ஓம் ஹ்ரீம் கௌர்யை நம: என்று சாத்தித் தூபதீபம் காட்டுக. பின்பு,

---

S. மனோரத முத்திரை—இஃது இரண்டு கைகளின் விரல்களைக் கோர்த்துச் சேர்த்து, சுட்டு விரல்கள் இரண்டையும் நீட்டிச்சேர்த்து, இரண்டு பெருவிரல்களையும் அதனடியில் பொருந்தும்படி சேர்ப்பது ஆகும்.

## 31. லயாங்க பூசை

பஞ்சப்பிரம ஷடங்கமாகிய சங்கிதா மந்திரம் பதினொன்றினாலே சுவாமியின் சிரசு, முகம், இருதயம், நாபி, முழந்தாள்கள், நேத்திரம், சிகை, கழுத்துப் பாகம், கைகள் ஆகிய இப்பதினொரு இடங்களிலும் உள்ள அங்கதேவராகிய லயாங்க தேவரைப் பூசை செய்து (அர்ச்சித்து). புஷ்பாஞ்சலி செய்து வணங்கி,

"சிறியேன், விரும்பியவற்றைப் பெறவேண்டிப் போகாங்க பூசை (ஆவரண பூசை) செய்கின்றேன்" என்று லயாங்க தேவர்களைப் பிரார்த்தித்து, உத்தரவு பெற்றதாகக் கருதி,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று சிவலிங்கப் பெருமானைப் பூசிக்கவும்.

## 32. போகாங்க பூசை (ஆவரண பூசை)

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம: என்று வடகிழக்குத் தளத்திலும்,

ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய நம: என்று கிழக்குத் தளத்திலும்,

ஓம் ஹும் அகோரஹ்ருதயாய நம: என்று தெற்குத் தளத்திலும்,

ஓம் ஹிம் வாமதேவ குஹ்யாய நம: என்று வடக்குத் தளத்திலும்,

ஓம் ஹம் சத்யோ சாத மூர்த்தயே நம: என்று மேற்குத் தளத்திலும்,

ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நம: என்று வடகிழக்குத் தளத்தில் ஈசான தேவருக்கு வடப்பக்கத்திலும்,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று தென்கிழக்குத் தளத்திலும்,

ஓம் ஹீம் சிரசே நம: என்று வடகிழக்குத் தளத்தில் நேத்திரத்திற்கு வடபாகத்திலும்,

ஓம் ஹ்ூம் சிகாயை நம: என்று தென்மேற்குத் தளத்திலும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று வடமேற்குத் தளத்திலும்,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று கிழக்கு. தெற்கு, வடக்கு, மேற்குத்தளங்களிலே முறையே உள்ள தத்புருட தேவர், அகோர தேவர், வாம தேவர், சத்யோசாத தேவர் இவர்களுக்கு இடப்பக்கத்திலும் பூசித்து,

பூசித்த முறைப்படியே ஸ்வாஹா அந்தமாக அவரவர் மந்திரங்களினுலே அர்க்கியம் அளித்து,

ஈசானம் முதலிய பஞ்சப்பிரம தேவர்களுக்கு வௌஷட் அந்தமாக அவரவர் மந்திரத்தால் முறையே தேனு முத்திரை, பத்ம முத்திரை, திரிசூல முத்திரை*, மகர முத்திரை S, சிருக்கு முத்திரைT களையும், அங்கதேவர்களுக்கு வௌஷட் அந்தமாக அவரவர் மந்திரங்களால் தனித்தனியே நமஸ்கார முத்திரையையும் காட்டுக. (இது முதலாவரண பூசை ஆகும்.) *

---

* திரிசூல முத்திரை—இஃது இருகைவிரல்களையும் கோர்த்துச் சேர்த்து இரு பெருவிரல்களையும், இருநடுவிரல்களையும், இரு சிறுவிரல்களையும் மட்டும் சேர்த்து நீட்டி முச்சூலம் போல் பிடித்தல்.

S மகர முத்திரை—இஃது இடக்கையின் நான்கு விரல்களையும் நீட்டிக் கவிழ்த்துப் பிடித்து அதன்மேல் வலக்கையின் நான்கு விரல்களையும் நீட்டிக் கவிழ்த்து வைத்து இரு பெருவிரல்களையும் அசைத்துக்கொண்டு பிடித்தல்.

T சிருக்கு முத்திரை — இஃது இருகை விரல்களை எதிர்முகமாகக் கோர்த்து வலக்கைச் சுட்டுவிரலினுல் இடக்கை நடுவிரலையும், இடக்கைச் சுட்டு விரலினுல் வலக்கை நடுவிரலையும் பிடித்து, அவற்றின் கீழ் இரு மோதிர விரலையும் அதன் கீழ் இரு சிறு விரலையும் வைத்து இருசிறுவிரலின் அடியில் இருபெரு விரல்களைத் தொடும்படி பிடித்தல்

* க்ஷணிகலிங்கபூசை உடையவர்களும், உடையவர் பூசை உடையவர்களும் முதலாவரண பூசை ஒன்றே செய்தால் போதும். அவர்கள் விரும்பினுல் மற்றைய நான்கு ஆவரண பூசைகளையும் செய்யலாம். அவை:

## இரண்டாமாவரணம்:

தளாக்கிரகங்களில் எட்டுத் திக்குகளிலும் முறையே "அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி" என்ற அஷ்டவித்தியேசுரர்களைப் பூசித்தல் இரண்டாவது ஆவரண பூசை ஆகும்.

## 33. புஷ்பாஞ்சலி—நாமகரணம்

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம : என்று கும்பிட்டுப் புஷ்பத்தைச் சிவபெருமானுக்குச் சாத்தி,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம : என்று இருகையினையும் விரித்துச் சேர்த்துச் சுவாமிக்கு நேராகக் காட்டுதலான மகாமுத்திரையைக் காட்டி,

ஓம் ஹாம் (ஸ்ரீ மட்டுவார் குழலி சமேத ஸ்ரீதாயுமான ஈசுவர சுவாமிநே நம :) என்று சுவாமிக்கு *நாமகரணம்* S செய்து,

## 34. தூப தீப நைவேத்தியம்

அஸ்திரமந்திரத்தால் மணி அடித்துக்கொண்டு இருதய மந்திரத்தால் தூபமும், நேத்திர மந்திரத்தால் தீபமும் கொடுத்து, ஆசமனம், அர்க்கியம் அளித்து, தனிப்பாத்திரத்தில் இருக்கும் நைவேத்தியத்தை,

ஓம் ஹ: *அஸ்த்ராய நம* : என்று விஷேடார்க்கியத்தால் புரோட்சித்து, *நிரீட்சணம், புரோட்சணம், தாடனம், அப்யுட்*

---

**மூன்றுமாவரணம் :**

பீடத்தின் கண்டத்தில் எட்டுத்திக்குகளிலும் முறையே "நந்தி, மகாகாளர், பிருங்கி, கணபதி, இடபம், கந்தர், பார்வதி, சண்டர்" என்ற அஷ்ட கணேசுரர்களைப் பூசித்தல் மூன்றாவது ஆவரண பூசை ஆகும்.

**நான்காமாவரணம் :**

கீழ்ப்பீடத்தில் எட்டுத் திக்குகளிலும், ஈசானத்தின் தெற்கிலும், நிருதிக்கு வடக்கிலும் முறையே "இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரமா, விஷ்ணு" என்ற உலக பாலகர் பதின்மர்களைப் பூசித்தல் நான்காவது ஆவரண பூசை ஆகும்

**ஐந்தாமாவரணம் :**

ஆதார சிலையின் மேல் எட்டுத்திக்கிலும், ஈசானத்தின் தெற்கிலும், நிருதிக்கு வடக்கிலும் முறையே, "வச்சிரம், சத்தி, தண்டம், கட்கம், பாசம், அங்குசம், கதை, சூலம், பதுமம், சக்கரம்" என்ற உலக பாலகர் பதின்மர்களின் ஆயுதம் பத்தினைப் பூசித்தல் ஐந்தாவது ஆவரண பூசை ஆகும்.

S இங்கே, அவரவர்கள் விரும்பி ஆசாரியனால் அளிக்கப்பெற்ற ஸ்தல மூர்த்தியின் பெயரை அமைத்துக்கொள்ளலாம்

ணம் என்ற நான்கு சமஸ்கரரங்களையும் * செய்து, கையில் புஷ்பங்கொண்டு,

ஓம் ஹாம் சபரிவாராய சிவாய (சுத்தான்னம் அல்லது நாளிகேரம், கதலீபலம்) நைவேத்தியம் ஸ்வாஹா என்று மிருக முத்திரையால் நிவேதித்து,

ஓம் ஹாம் சபரிவாராய சிவாய பானீயம் ஸ்வாஹா என்று பானீயம் (ஏலம், சந்தனம், பச்சைக் கற்பூரமும், முதலியன இடப்பெற்ற சலம்) கொடுத்து, ஆசமனம் அளித்து,

ஓம் ஹாம் சபரிவாராய சிவாய தாம்பூலம் நைவேத்தியம் ஸ்வாஹா என்று தாம்பூலம் நிவேதித்து அர்க்கியம் அளித்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று மணி அடித்துக் கொண்டு பூசித்துத் தூபதீபம், ஆசமனம், அர்க்கியம் கொடுக்கவும்.

## 35. பவித்திரதானம்

புஷ்பம், வில்வம், அருகு, அட்சதை முதலியவற்றைக் கையில் நிறைய வைத்துக் கும்பிட்டு,

ஓம் ஹாம் ஹௌம் சர்வ தத்துவாதிபதயே சிவாய நம: என்று சிவபெருமானுக்குப் (பாவனையாகப்) பவித்திரம், [பூணூல்,) சாத்துவதாகச் சாத்துக.

## 36. கற்பூர ஆராத்திரிகம்

ஓம் ஹைம் கவசாய கற்பூர தீபம் ஸ்வாஹா என்று கற்பூரதீபம் காட்டி, ஆசமனம், அர்க்கியம் அளித்து,

ஓம் ஹாம் லகுளீ சுவராய நம: என்று விபூதியில் பூசித்து, மிருக முத்திரையினால் விபூதியைச் சிறிது எடுத்துச் சுவாமிக்கு மும்முறை உபசாரம் காட்டி, பின்பு,

அவ்விபூதியைத் தானும் முன்னர், வலக்கை நடுவிரல் அணிவிரல்களினால் நெற்றியின் இடப்பக்கம் தொடங்கி வலப் பக்கமாக இழுத்து, அதன்பின் பெருவிரலினால்

---

* இந்த நான்கு சமஸ்காரங்களை சைவானுட்டான முறை என்ற நூலில் சலசுத்தியில் காண்க.

அவற்றின் கீழாக நெற்றியில் வலப்பக்கம் தொடங்கி இடப் பக்கம் இழுத்துத் தரிக்க. * அதன்பின் கை கழுவி,

தருப்பணம் (கண்ணாடி), குடை, வெண்சாமரம், கொடி, விசிறி, தாலவட்டம் முதலிய இராசோபசாரப் பொருள்களால் உபசாரங்களைச் சமர்ப்பித்து, S

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று மூன்றுதரம் புஷ்பாஞ்சலி செய்து சுவாமிக்கு மகாமுத்திரை, பஞ்சமுகீ முத்திரைகளைக் காட்டவும்.

## 37. பவாதிநாம அருச்சனை

1. ஓம் பவாய தேவாய நம:
2. ஓம் சர்வாய ,,
3. ஓம் ஈசாநாய ,,
4. ஓம் பசுபதயே ,,
5. ஓம் உக்ராய தேவாய நம:
6. ஓம் ருத்ராய ,,
7. ஓம் பீமாய ,,
8. ஓம் மகாதேவ ,,

என்று அருச்சித்து, அல்லது சிவ அஷ்டோத்திர சத நாம அருச்சனை புரிந்து,

ஓம் ஹாம் ஸ்ரீ மட்டுவார் குழலி சமேத ஸ்ரீ தாயுமான ஈசுவர சுவாமிநே சிவாய மந்திர புஷ்பாணி சமர்ப்பயாமி என்று சிவபெருமானுக்கு வில்வம் புஷ்பம் சாத்துக.

## 38. செப சமர்ப்பணம்

இடப தேவருக்கும் சூரிய மூர்த்திக்கும் இடையே செபமாலையை ஒரு பத்திரத்தின்மேல் வைத்து, சந்தனம் சாத்தி,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று பூசித்த பிறகு,

இடக்கையில் ஒரு பத்திரத்தில் புஷ்பம் வைத்துக் கொண்டு அதன்மேல்,

---

* இவ்வாறு விபூதி தரித்தலை அநுலோமப் பிரதி லோமம் என்பர். இதனால் மகாபாதகங்கள் நீங்குகின்றன என நூல் கூறும்.

S. 'தருப்பணம், குடை முதலிய உபசாரப் பொருள்கள் இல்லையேல் கையில் புஷ்பத்தை வைத்துக்கொண்டு அவ்வவற்றின் பெயரைக் கூறி உபசாரம் செய்க

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று விசேடார்க்கிய சலத்தால் புரோட்சித்து, அதன் பிறகு,

செபமாலையை எடுத்து வலக்கைச் சுட்டு விரலில் மாட்டிப் பரிவட்டத்திஞல் மூடிக்கொண்டு பெருவிரலிஞல் ஒவ்வொரு மணியைக் கீழ்நோக்கித் தள்ளிக்கொண்டு,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று நூற்றெட்டு தரமாயினும் அல்லது அதிற் பாதியாயினும், பத்துதரமாயினும் செபித்துச் செபமாலையைப் பூசித்த இடத்தில் வைத்துவிட்டு,

இடக்கையில் இருக்கும் பத்திர புஷ்பத்தின்மேல் வலக்கையினை வைத்து,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: ஓம் ஹைம் கவசாய நம:, ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று உச்சரித்து,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: ஓம் ஹைம் கவசாய நம: ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று மூடி,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று சோடிகை முத்திரையிஞல் திக்குப் பந்தனமும்,

ஓம் ஹைம் கவசாய நம: என்று நீட்டிய சுட்டு விரலால் அவகுண்டனமும் செய்து,

வலக்கையில் வாங்கி வைத்துக்கொண்டு விசேடார்க்கிய சலம் கூட்டி. உற்பவ முத்திரை*யிஞல், வலமுழந்தாளை நிலத்தில் ஊன்றிக்கொண்டு,

"சிவபெருமானே! நீர் மிக இரகசியமானவர்; பாது காப்பவர்; அடியேன் செய்த செபத்தை ஏற்றுக்கொள்ளும்; உம்முடைய திருவருளால் அடியவனுக்கு யாவும் சித்தி அளிக்கட்டும்.

அடியவன் செய்த புண்ணிய பாவங்களை எல்லாம் எப்பொழுதும் உமது இடத்தில் அளித்தேன்; அடியேன் பொருட்டுப் புண்ணியத்தை ஏற்றுப் பாவத்தைப் போக்கியருளுங்கள்.

---

* உற்பவ முத்திரையினைச் சூரிய பூசாப் பகுதி 20-வது தலைப்பில் காண்க.

கொடுப்பவரும் நீரே; கொள்பவரும் நீரே; உம்மை அன்றி உலகம் இல்லை; நீரே உலகம்; அடியவனும் உம் வடிவமே'' என்று பிரார்த்தித்துத் தன்னையும் தான்செய்த செபம், கருமம் இவற்றையும் சுவாமியின் வலக்கையில் கொடுத்து (எதிரில் விட்டு,)

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று செபித்த புஷ்பத்தைச் சுவாமிக்குச் சாத்தவும்.

பிறகு, பஞ்சப் பிரம மந்திரத்தையும் ஷடங்க மந்திரத்தையும் இயன்றவாறு செபித்துப் புஷ்பம் சாத்தவும்.

## 39. குருமூர்த்தி பூசை

சுவாமிக்குத் தென்கிழக்கில் சூரியமூர்த்திக்குத் தென் பகுதியில், இடம் வகுத்து, சடுத்தாசனம் பூசித்து அதன்மேல் ஒரு பத்திரத்தில் சந்தனம் வைத்து அதில்,

ஓம் ஹாம் சிவாசநாய நம: என்று பூசித்து, அவ்வாசனத்தின்மேல் தனது குருவை நினைத்து,

ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்று அக்குரு மூர்த்தியைப் பூசித்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று அம்மூர்த்தியிலே சிவனைப் பூசித்து, ஸ்வாஹா அந்தமானசிவமூலத்தால் அர்க்கியம் அளித்து, சந்தனம், புஷ்பம், சாத்தித் தூபதீபம் காட்டித் தோத்திரம் செய்க.

## 40. வித்தியா பீட பூசை

சுவாமிக்கு மேற்கில் வாஸ்துபதிக்குத் தெற்கில் ஒரு பத்திரத்தில் சந்தனம் வைத்து, அதன்மேல்,

ஓம் ஹாம் யோக பீடாய நம : என்று யோக பீடத்தைப் பூசித்து, அதில்,

ஓம் ஹாம் வித்யாபீடாய நம : என்று சிவாகமம், சைவத் திருமுறை ஆகிய இவற்றை நினைத்துப் பூசித்து, ஸ்வாஹா அந்தமான சிவமூலத்தால் அர்க்கியம் அளித்து, சந்தனம், புஷ்பம் சாத்தி, தூபதீபம் அளிக்கவும்.

### 41 புஷ்பாஞ்சலி-பிரதட்சண நமஸ்காரம்.

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று மூன்று தரம் புஷ்பாஞ்சலி செய்து கும்பிட்டுக்கொண்டு, தேவார திருவாசகாதி அருட் பாடல்களிலுள்ள சிவதோத்திரங்களை இயன்ற வரையும் பக்திப் பரவசத்துடன் தோத்திரம்செய்து, எழுந்து சிரசின்மேல் கை குவித்துக் கொண்டு குறைந்தது மூன்றுதரமேனும் பிரதட்சணம் செய்து, சுவாமிக்கு முன் னிலையில் இருகைகளினாலும் புஷ்பங்களைத் தூவி, மூன்று முறை சாஷ்டாங்க நமஸ்காரம் * செய்து மகிழ்வுடன் எழுந்து நின்று, வேண்டும் வரங்களையெல்லாம் வேண்டிக் கொள்க.

### 42. துவிதியாதி கால பூசை

பிறகு, வடக்கு நோக்கி இருந்து கை கழுவிக் கொண்டு, விபூதியை உத்தூளனமாக நெற்றியில் தரித் துக்கொள்க.

மத்தியானகால (இரண்டாவது கால) சிவபூசை, சாயங்கால (மூன்ருவது கால) சிவபூசை செய்ய இயலா தவர்கள் கீழ்வரும் முறைப்படி ஒவ்வொரு தரமாக இரண்டு தரம் சிவனைப் பூசிக்கவும்.

சிவபெருமானை ஆசன மூர்த்தி மூலங்களாலும், போகாங்க தளங்களிலுள்ள பஞ்சப்பிரமம், நேத்திரம், இருதயம், சிரசு, சிகை, கவசம், அஸ்திர மந்திரங்களா லும் பூசித்து, ஸ்வாஹா அந்தமான சிவமூலத்தால் அர்க் கியம் அளித்துச் சந்தனம், புஷ்பம் சாத்தித் தூப தீபங் கொடுத்து, நைவேத்தியம் செய்யவும். அதன்பின்னர்,

### 43. நித்தியாக்கினி காரியபூசை

சிவபூசையில் நித்தியாக்கினி காரியம் செய்ய அதி காரம் இல்லாதவர், அதிகாரம் இருந்தும் திரவியங்களைச் சேகரிக்கச் சக்தியற்றவர் ஆகிய இவர்கள்,

---

* சாஷ்டாங்க நமஸ்காரம் — இது தலை, கைகளிரண்டு, காதுகளிரண்டு, மோவாய், புயங்களிரண்டு ஆகிய எட்டு அங்கங்களும் பூமியில் பொருந்தும்படி வணங்குதலாம் (தலை, கைகள் முழந்தாள்கள் ஐந்து அங்கங்கள் பூமியில் பொருந் தும்படி வணங்குதல் பஞ்சாங்க நமஸ்காரமாம்)

சிவபெருமானுக்கு ஆசனம், மூர்த்தி, மூலம், நேத்திரம் மொழிந்த அங்கமந்திரம் ஆகிய அஷ்ட புஷ்பமந்திரங்களால் பூசித்து, ஸ்வாஹா அந்தமான சிவமூலத்தால் அருக்கியம் அளித்து, "எம்பெருமானே! அடியேனுக்கு உமது திருவருளால் எல்லா நன்மைகளும் உண்டாவதோடு அக்கினி காரிய பூசைப்பலனையும் அருள வேண்டும்" என்று வேண்டிக்கொள்ளவும்.

## 44. இஷ்ட காமிய மூர்த்தி பூசை

பின்னர், தனக்கு இஷ்ட காமியமூர்த்தியாக ஏதேனும் (விநாயகர் அல்லது முருகன், வைரவர், நால்வர், சந்தான குரவர் முதலிய) மூர்த்திகள் இருக்கின், பூசிக்கவேண்டுமானல் சிவலிங்கப் பெருமானுக்கு வடக்குப் பாகத்திலே குபேரனுக்கும் ஈசானனுக்கும் இடையில் வைத்துப்பூசிக்க. பூசிக்க இருக்கும் உருவ மூர்த்தியை வைத்தேனும் அல்லது ஒரு பத்திரத்தில் சந்தனத்தை வைத்தேனும் பூசிக்க.

முன்னர் தனது இஷ்ட காமிய மூர்த்திக்குச் சந்தனம் புஷ்பம் சாத்தி, சடுத்தாசனபூசை புரிந்து, அவரவர்க்குரிய ஆசன, மூர்த்தி, மூலம், வித்தியாதேகம், நேத்திர மந்திரங்களால் பூசித்து, அர்ச்சனைபுரிந்து ஸ்வாஹா அந்தமான அவரவர்க்குரிய மூல மந்திரத்தால் அர்க்கியம் அளித்து, சந்தனம், புஷ்பம், அறுகு, அட்சதைகளை, வௌஷடந்த அவரவர் மூல மந்திரத்தால் சாத்தித் தூப தீபங்காட்டி நைவேத்தியம் செய்து, கற்பூரதீபம் காட்டி, கையில் புஷ்பங்கொண்டு கும்பிட்டுத் தியானித்துச் சுவாமிக்குச் சாத்தி வேண்டிக் கொள்க.

## 45. அஷ்டபுஷ்ப மந்திர பூசை

அதன்பிறகு, இறுதியாகச் சிவலிங்கப் பெருமானை, ஆசன மூர்த்தி, மூலம், நேத்திரம் ஒழிந்த அங்கமந்திரம் ஆகிய அஷ்ட புஷ்ப மந்திரங்களால் பூசித்து,

"எம்பெருமானே, குறைவாகவேனும் நிறைவாகவேனும் எனது அஞ்ஞானத்தால் செய்யப்பட்ட யாவும்,

உமது அனுக்கிரகத்தால் அடியேனுக்குப் பரிபூரணம் ஆகட்டும்'' என்று வேண்டிக்கொண்டு,

ஓம் ஹாம் ஹெளம் சிவாய வெளஷட் என்று பஞ்ச முகீமுத்திரை காட்டி, சுவாமியின் மேற்கு, வடக்கு, தெற்கு, கிழக்கு, ஈசானம் இந்தத் திசைகளிலுள்ள சிரசுகளில் முறையே,

ஓம் ஹம் சத்யோஜாத மூர்த்தயே நம:, ஓம் ஹிம் வாமதேவ குஹ்யாய நம:, ஓம் ஹூம் அகோர ஹ்ருதயாய நம:, ஓம் ஹேம் தத்புருஷ வக்த்ராய நம:, ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம: என்றும், ஒவ்வொன்றின் முடிவில்,

ஓம் ஹாம் ஹெளம் சிவாய நம: என்றும் பூசித்து, பூசித்த முறைப்படியே ஸ்வாஹா அந்தமாக அவரவர் மந்திரத்தால் அர்க்கியம் அளிக்கவும்.

## 46. சிவபூசை ஒடுக்கம்

பிறகு, சுவாமிக்கு முன்னிலையில்,

ஓம் ஹாம் ஹெளம் சிவாய அஸ்த்ராய பட் என்று ஒரு பத்திரத்தை இரண்டாகக் கிள்ளி, சுவாமிக்கு இரண்டு பக்கங்களிலும் நாராச முத்திரையினால் தெறித்து,

ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்று ஒரு பத்திரத்தைக் கிள்ளிக் கூட்டிச் சுவாமிக்குச் சாத்தி,

அஸ்திரம், கவசம், சிகை, சிரசு இருதயம், நேத்திரம், சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசானம் என்று பிரதிலோமக் கிரமமாகப் போகாங்க மந்திரங்களைக் கிரகித்து (சொல்லி) அருச்சித்து, அவரவர் மந்திரத்தால் ''பராங்முகார்க்கியம் ஸ்வாஹா'' என்று விசேஷார்க்கியத்தால் பராங் முகார்க்கியம் அளித்து,

ஓம் ஹ: அஸ்த்ராய ஹூம்பட் என்று நாராச முத்திரையினால் புஷ்பத்தைத் தெறித்துப் போகாங்க மந்திரங்கள் மின்போல எழும்பியதாகக் கருதித் திவ்ய முத்திரையினால்,

ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்று சிவமூர்த்தியாகிய சிவலிங்கத்திலே போகாங்க தேவர்களை யோசித்து (சேர்த்து),

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று சிவலிங்க மூர்த்தியைப் பூசிக்க.

அதன்பின், சிவாசன (திராசன) மந்திரங்களை,

ஓம் ஹ: அஸ்த்ராய ஹூம்பட் என்று நாராச முத்திரையினால் புஷ்பத்தைத் தெறித்து எழுப்பி, (அதாவது சொல்லியதாகப் பாவித்து),

ஓம் ஹாம் சிவாசநாய நம: என்று திவ்ய முத்திரையினாலே சிவாசனமாகிய பீடத்திலே யோசித்து (சேர்த்து), பிறகு,

ஓம் ஹ்ரீம் கௌர்யை பராங்முகார்க்கியம் ஸ்வாஹா என்று பராங்முகார்க்கியம் அளித்துத் திவ்ய முத்திரையினால் கௌரியைச் சிவத்துடன் யோசிக்க. அதன்பின்,

ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம: என்று சிவலிங்கப் பெருமானைப் பூசித்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய பராங்முகார்க்கியம் ஸ்வாஹா என்று சுவாமிக்குப் பராங்முகார்க்கியம் அளித்து,

''எம்பெருமானே, அடியேனின் பிழைகளையும் அறியாமையால் கொடுக்கப்பெற்ற சிரமத்தையும் பொறுத்தருள்க'' என்று பிராத்திக்கவும். பின்பு,

ஓம் ஹ: அஸ்த்ராயபட் என்று சோடிகை முத்திரையினால் வலமாகத் திக்குப் பந்தனமும்,

ஓம் ஹைம் கவசாய வௌஷட் என்று நீட்டிய சுட்டு விரலால் வலமாக அவகுண்டனமும் சுவாமிக்குச் செய்து,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று தேனு முத்திரையும் காட்டிச் சிவபெருமானை,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஹ்ருதயாய நம: என்று சங்காரமுத்திரை கொண்டு எடுத்து இடமூக்கில் பூரக (இழுக்கும்) வாயுவினாலே கொண்டுசென்று இருதயத் திலே ஒடுக்கிக் கொள்ளவும்.

## 47. தன்குரு ஆதியோர் பூசை ஒடுக்கம்

சிவபெருமானை இருதயத்தில் ஒடுக்கிய பின்பு, தனது குரு, வித்தியாபீடம், கணபதி, இலட்சுமி, சதாசிவாதி சப்த குரவர், பத்சிமத்துவார தேவர், பச்சிமத் துவார பாலகர், இடப தேவர், இஷ்ட காமிய மூர்த்தி ஆகிய இவர்களுக்குத் தனித்தனியே அவரவர் மந்திரங்களால் சாமானியார்க்கியத்தால் ஸ்வாஹா அந்தமாகப் பராங் முகார்க்கியம் கொடுத்துத் திவ்ய முத்திரையினால்,

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று அவரவர்களைத் திவ்ய முத்திரை கொண்டு இருதயத்திலே ஒடுக்கிக் கொள்ளவும்.

## 48. சூரிய பூசை ஒடுக்கம்

பிறகு கிழக்கே நோக்கி இருந்து சூரிய மூர்த்தியை,

ஓம் அம் அர்க்காசநாய நம:, ஓம் கம் கஷோல் காய சூர்ய மூர்த்தயே நம:, ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாய நம:, ஓம் அம் ஹ்ருதயாய நம:, ஓம் அம் அர்க்காய சிரசே நம:, ஓம் அம் பூர்புவ: ஸ்வரோம் ஜ்வாலிநீ சிகாயை நம:, ஓம் ஹ்ரும் கவசாய நம: ஓம் ர: அஸ்த்ராய நம: என்று சூரிய அஷ்டபுஷ்ப மந்திரந்தால் பூசித்து, பின்பு,

ஓம் கம் கஷோல் காய பராங்முகார்க்கியம் ஸ்வாஹா என்று சூர்யார்க்கியத்தினால் பராங்முகார்க்கியம் சூர்ய மூர்த்திக்கு அளித்துப் பிரார்த்தித்து,

ஓம் ர: அஸ்த்ராய ஹூம் பட் என்று நாராச முத்திரையினால் புஷ்பத்தைத் தெறித்து இருதயம் முத லாகிய சூரிய ஷடங்க மந்திரங்களை எழுப்பி (சொல்லி)த்

திவ்ய முத்திரையினல் ஓம் கம் கஷோல்காய சிவ சூர்ய மூர்த்தயே நம: என்று சூரிய மூர்த்தியிடத்தில் சூரிய மூர்த்தியை யோசித்து (சேர்த்து), அதன் பின் திவ்ய முத்திரையினுல்,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவ சூர்யாய ஹ்ருதயாய நம : என்று சூரிய மூர்த்தியைத் தனது இருதய கமலத்தில் இருக்கும் சிவ சூரியனிடத்தே ஒடுக்கவும். (சேர்க்கவும்,)

பிறகு உஷாதேவி, பிரத்யுஷா தேவி, சோமாதி கிரகங்கள் முதலியவர்களுக்கு அவரவர் மந்திரங்களால் சூரியார்க்கியத்தினுல் ஸ்வாஹா அந்தமாகப் பராங்முகார்க்கியம் கொடுத்து, திவ்ய முத்திரையினுல் இருதயத்திலிருக்கும் சூரிய மூர்த்தி இடத்தில் ஒடுக்கிக்கொள்ளவும்.

அதன்பின்பு, சூரிய பூசை செய்த பத்திர புஷ்ப நைவேத்திய நிருமாலியங்களைச் சேர்த்து எடுத்து, தேசஸ் சண்டேசுவர பூசைக்குத் தனியே வைத்துக் கையலம்பி, விபூதி தரிக்க.

## 49. சிவபூசை முடிவு

பிறகு வடக்கு நோக்கி இருந்து க்ஷணிக லிங்க பூசை செய்தவர்கள்,

*ஓம் ஹாம் ஹெளம் சிவாய நம:* என்று பீடத்திலிருந்து க்ஷணிகலிங்கமூர்த்தியைத் தனியே மிக அன்பும் பக்தியும் கொண்டு எடுத்துத் தனது இருகண்களிலும் ஒற்றிக் கொண்டு விசர்ச்சனம் செய்க, பிறகு பத்திர புஷ்ப நைவேத்திய நிருமாலியங்களை ஒன்று சேர்த்து எடுத்து, *த்வநிச் சண்டேசுவர பூசைக்குத்* தனியே வைக்கவும்.

மகாலிங்க பூசை (உடையவர் பூசை) செய்தவர்கள் சுவாமியை மீட்டும் அஷ்ட புஷ்ப மந்திரத்தால் பூசித்து, வெளஷட்ந்த மூலமந்திரத்தால் பஞ்சமுகீமுத்திரை காட்டி,

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம: என்று மானதமாக உச்சரித்துக் கொண்டு பீடத்திலிருந்து சிவலிங்கப்பெருமானைப் புஷ்பத்துடன் மெல்ல எடுத்துப் பக்திப்பரவசத்துடன் தனது இருகண்களிலும் ஒற்றிக்கொண்டு,

மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேருய் நின்ருனைப்
பண்பொருந்த இசைபாடும் பழனஞ்சேர் அப்பனைஎன்
கண்பொருந்தும் போழ்தத்துங் கைவிடநான் கடவேனே?

—தேவாரம்—அப்பர்

என்று தோத்தரித்துத் துய்ய வஸ்திரத்தினல் சுவாமியைச் சுற்றிப் பெட்டகத்தில் வைத்து மூடிப் பாதுகாவலின் பொருட்டு,

ஓம் ஹாம் பீமருத்ராய நம: என்று பீம ருத்திரர்களைப் பூசிக்கவும். பிறகு பத்திர புஷ்ப நைவேத்திய திருமாலியங்களை ஒன்று சேர்த்து எடுத்து, த்வனிச் சண்டேசுவர பூசைக்குத் தனியே வைக்கவும்.

## 50. சண்டேசுவர பூசை

| சூரிய பூசை<br>தேசஸ் சண்டேசுவரர் | சிவபூசை<br>த்வனிச்சண்டேசுவரர் |
|---|---|
| 1. சூரியமூர்த்தியின் பதும பீடத்திற்குக் கிழக்கே ஒரு சிறு இடத்தில் சலம் தெளித்து இடம் வகுத்து அதில் தேசஸ் சண்டேசுவரரைக் கருதி ஒரு பத்திரத்தில் சந்தனம் வைத்துச் சடுத்தாசனம் பூசித்து, | 2. சுவாமிக்கு ஈசான திக்கில் ஒரு சிறு இடத்தில் சலம் தெளித்து இடம் வகுத்து அதில் த்வநிச் சண்டேசுவரரைக் கருதி ஒரு பத்திரத்தில் சந்தனம் வைத்துச் சடுத்தாசனம் பூசித்து, |
| ஓம் அம் தேசஸ் சண்டாஸநாய நம:, ஓம் அம் தேசஸ் சண்டமூர்த்தயே நம:, ஓம் அம் தேசஸ் சண்டாய நம: என்று பூசித்து, | ஓம் ஹாம் த்வநிச் சண்டாஸநாய நம:, ஓம் ஹாம் த்வநிச்சண்டமூர்த்தயே நம:, ஓம் ஹாம் த்வநிச் சண்டாயநம: என்று பூசித்து, |

3. ஓம் அம் தேசஸ் சண்டாய அர்க்கியம் ஸ்வாஹா என்று அர்க்கியம் அளித்து,

4. ஓம் ஹாம் த்வநிச்சண்டாய அர்க்கியம் ஸ்வாஹா என்று அர்க்கியம் கொடுத்து,

5. சூரிய மூர்த்தியின் நிருமாலியமான சந்தனம், புஷ்பம், அறுகு, அட்சதை முதலியவற்றை ஓம் அம் தேசஸ் சண்டாய நம: என்று தேசஸ் சண்டருக்குச் சாத்தி,

6. சிவபூசையின் நிருமாலியமான சந்தனம், புஷ்பம், அறுகு, அட்சதை முதலியவற்றை ஓம் ஹாம் த்வநிச் சண்டாய நம: என்று த்வநிச் சண்டருக்குச் சாத்தி,

ஓம் அம் தேசஸ் சண்டாய தூபம் ஸ்வாஹா, தீபம் ஸ்வாஹா என்று தூபதீபம் காட்டி,

ஓம் ஹாம் த்வநிச்சண்டாய தூபம் ஸ்வாஹா:, தீபம் ஸ்வாஹா என்று தூப தீபம் காட்டி,

7. சூரியமூர்த்தி பூசையின் நிருமாலிய நைவேத்தியத்தை

8. சிவபூசையின் நிருமாலிய நைவேத்தியத்தை,

ஓம் அம் தேசஸ் சண்டாய நிர்மால்ய நைவேத்தியம் ஸ்வாஹா என்று நிவேதித்து, கற்பூரதீபம் ஸ்வாஹா என்று கற்பூரதீபம் காட்டி,

ஓம் ஹாம் த்வநிச்சண்டாய நிர்மால்ய நைவேத்தியம் ஸ்வாஹா என்று நிவேதித்து, கற்பூர தீபம் ஸ்வாஹா என்று கற்பூர தீபம் காட்டி,

9. ஓம் ர: அஸ்த்ராய பட் என்று மும்முறை இடவுள்ளங்கையில் வலக்கையின் நடு மூன்று விரலால் தட்டுதலாகிய தாளத்திரயம் செய்து, ''சுவாமீ, சூரியபூசையில் நேர்ந்த குறை, மிகைகளால் உண்டாகிய குற்றங்களைப் பொறுத்தருளிச் சூரிய பூசையின் பயனை அடியேனுக்கு அருள்க'' என்று வேண்டிக் கும்பிட்டு,

10. ஓம் ஹ: அஸ்த்ராய பட் என்று மும்முறை இடவுள்ளங்கையில் வலக்கையின் நடு மூன்று விரலால் தட்டுதலாகிய தாளத்திரயம் செய்து, ''சுவாமீ! சிவபூசையில் நேர்ந்த குறை, மிகைகளால் உண்டாகிய குற்றங்களைப் பொறுத்தருளிச் சிவபூசையின்பயனை அடியேனுக்கு அருள்க''என்று வேண்டிக் கும்பிட்டு,

11. ஓம் அம் தேசஸ் சண்டாய பராங்முகார்க்கியம் ஸ்வாஹா என்று அர்க்கிய நீரால் பராங்முகார்க்கியம் அளித்து,

12. ஓம் ஹாம் த்வநிச் சண்டாய பராங் முகார்க்கியம் ஸ்வாஹா என்று அர்க்கிய நீரால் பராங் முகார்க்கியம் அளித்து,

13. திவ்விய முத்திரையினல்

ஓம் அம் தேசஸ் சண்டாய ஹ்ருதயாய நம: என்று தேசஸ் சண்டரைத் தனது இருதயத்தில் ஒடுக்கிக் கொள்ளவும்.

14. திவ்விய முத்திரையினல்

ஓம் ஹாம் த்வநிச்சண்டாய ஹ்ருதயாய நம: என்று த்வநிச்சண்டரைத் தனது இருதயத்தில் ஒடுக்கிக் கொள்ளவும்.

## 51. அர்க்கிய ஒடுக்கம்

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம: என்று விசேஷார்க்கியத்தையும்,

ஓம் அம் ஹ்ருதயாய நம: என்று சூரியார்க்கியத்தையும் இருதயத்தில் ஒடுக்கி, வேறு ஒரு பாத்திரத்தில் அருக்கிய நீரை ஊற்றி விட்டு, அருக்கிய வட்டகைகளைச் சுத்தி செய்க.

எல்லா நிருமாலியங்களையும் திரட்டி எடுத்து, அவற்றையும் அருக்கிய நீரையும் புறத்தே கால்படாத இடத்தில் விட்டு விடுக.

பிறகு பூசா ஸ்தானத்தைக் கோமயத்தினல் (பசுச் சாணத்தால்) மெழுகிச் சுத்தி பண்ணுக.

அதன் பிறகு கையலம்பி, ஆசமனம், தொடுமிடம், சகளீகரணம் செய்து, சாமானியார்க்கியத்தால்,

*ஓம் ஹ: அஸ்த்ராய நம:* என்று பூசா ஸ்தானத்திலும், தன் சிரசிலும் புரோட்சித்து, அந்தச் சாமானியார்க்கியத்தையும்,

*ஓம் ஹாம் ஹ்ருதயாய நம:* என்று இருதயத்தில் ஒடுக்கி அர்க்கிய வட்டகையைச் சுத்தம் செய்து வைக்கவும்,

## 52. அகோர மந்திர செபம்

பின்பு வெளியே வந்து கைகால்களைக் கழுவிச் சுத்தம் செய்து ஆசமனம் பண்ணி விபூதி தரித்து, வடக்கு நோக்கி உட்கார்ந்து, குட்டிக் கும்பிட்டுப் பிரணுயாமம் சகளீகரணம் செய்து சமஸ்த சிவபூசா பலமும் சித்திக்கும் பொருட்டு,

*ஓம் ஹாும் அகோர ஹ்ருதயாய நம:* என்னும் அகோர மந்திரத்தை இருபத்தொரு தரம் செபிக்கவும். பிறகு பிராணுயாமம் சகளீகரணம் செய்து கும்பிட்டு எழுந்து, கோபூசை செய்க.

---

# IV. பிற பகுதி

—o—

## 1. கோபூசை (கோ-பசு)*

கோ பூசை செய்ய விரும்பின், ஒரு பத்திரத்தில் சந்தனம் வைத்தாவது அல்லது பசுவை முன்னே கொண்டு வந்து நிறுத்தியாவது பூசிக்க,

[பசுவானால் மஞ்சள், சந்தனம், புஷ்பம் சாத்துக.]

ஓம் ஹாம் கபிலே நந்தே நம:
ஓம் ஹாம் கபிலே பத்ரே நம:
ஓம் ஹாம் கபிலே சுசிலே நம:
ஓம் ஹாம் கபிலே சுரபே நம:
ஓம் ஹாம் கபிலே சுமநஸே நம:

என்று பூசித்து, பசுவுக்கு அறுகம்புல் கொடுக்க; இன்றேல் அறுகு சாத்தி,

---

* பசுவின் உடல் எங்கும் தேவர்கள் வீற்றிருப்பதால் கோபூசை செய்தல் பால் பாக்கியமும், குடும்ப விருத்தியும் உண்டாகும் என நூல் கூறும்.

*ஓம் ஹாம் கபிலே ஸ்வாஹா* என்று அர்க்கியம் அளித்து, சந்தனம் புஷ்பம் சாத்தி, தூப தீபம் காட்டுக.

பிறகு சந்தனத்தில் பூசை செய்ததானுல் இருதய மந்திரங்கூறித் திவ்ய முத்திரையினுல் இருதயத்தில் ஒடுக்கவும்.

பின்பு சிவாலயத்திற்குச் சென்று *சிவதரிசனம்* செய்து வந்து போசனம் செய்க. காலையில் சிவதரிசனம் செய்து வர இயலாதேல் மாலையில் செய்க.

## 2. போசன விதி

முன்னர் விபூதியை உத்தூளனமாக அணிந்து மௌனமாகத் தக்கவாறு ஓர் ஆசனத்தில் உட்கார்ந்த பின்பு,

வாழை, பலா, புன்னை, பாதிரி, பலாசு, தாமரை, (பொற்றட்டு, வெள்ளித் தட்டு) முதலியவற்றில் ஏதேனும் ஒன்றைச் சுத்தம் செய்து போசன பாத்திரமாக அமைத்து, அதில் காய்கறி அன்னம் நெய் முதலியவற்றை ஒருசேரப் படைத்தவுடன்,

அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கும் மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கும் ஆறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே—

என்று ஓதி, வலக்கை அணிவிரலால் குடிக்கும் சல பாத்திரத்திலுள்ள சலத்தைத்தொட்டு அன்னத்தின்மேல்,

ஓம் ஹ: அஸ்த்ராய நம: என்று புரோட்சித்து,

ஓம் ஹைம் கவசாய நம: என்று அப்பியுட்சணம் செய்து (மூடி)

ஓம் ஹாம் ஜூம்ஸ: வௌஷட் என்று வௌஷடந்தமான மிருத்தியுஞ்ச மந்திரத்தால் அன்னத்தைத் தொட்டுக் கொண்டு ஏழுதரம் அபிமந்திரித்து,

ஓம் ஹாம்சிவ குருப்பியோ நைவேத்தியம் ஸ்வாஹா என்று சிவபெருமானுக்கும், குரவருக்கும் நிவேதனம் செய்து,

பிறகு போசன பாத்திரத்தின் வலப் பக்கத்தில் பூமியில் சிறிது அன்னம் எடுத்து வைத்து, வலவுள்ளங்கையில் சிறிது சலத்தை ஏந்தி, சிறு விரலாலே விழுகின்ற சலத்திஞல்,

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நம: என்று அன்ன பாத்திரத்தை வலமாக வளைத்துச் சுற்றி,

ஓம் ஹாம் நாக கூர்ம க்ரகர தேவ தத்த தனஞ்சேயோ உபப்பிராண வாயுப்ய ஸ்வாஹா என்று பூமியில் இருக்கும் அன்னத்தின்மேல் சிறு விரல் நுனியால் சிறிது சலம் விட்டு, நாகாதிகளுக்கு நிவேதித்து,

ஓம் ஹேம் *தத்புருஷ வக்த்ராய ஸ்வாஹா* என்று கையில் மிகுந்துள்ள சிறிது சலத்தை ஆசமிக்கவும். பிறகு அன்னத்தைப் பிசைந்து,

ஓம் ஹ: *அஸ்த்ராய* உம்பட் என்று உதராக்கினியைச் சொலிப்பித்து, சிவமூல மந்திரத்தை மனத்திலே சிந்தித்து, அச் சிந்தனேயோடு வேண்டும் அளவு புசிக்க. * போசன முடிவில் சிறிது சலத்தை வலக்கையில் ஏந்தி,

ஓம் ஹேம் *தத்புருஷ வக்த்ராய ஸ்வாஹா*: என்று உத்தராபோசனம் (உத்தரம்+ஆபோசனம் உத்திரம்—கடைசி; ஆபோசனம் — ஆசமித்தல்.) செய்து எழுந்து புறத்தே சென்று கை அலம்பி இடப்பக்கத்தே வாய் கொப்பளித்து கைகால்களை நன்ருக அலம்பி, ஆசமனம் செய்து, ஓரிடத்தில் வந்து உட்கார்ந்து *சிவ சிவ* என்று விபூதி அணிக. தேவையாஞல் தாம்பூல தாரணம் செய்க.

ஆன்மார்த்த சிவபூசா முறை
முற்றிற்று.

---

* அந்நிய இடங்களில் இருந்து போசனம் செய்ய நேரின், சிவகாயத்திரியை மும்முறை செபித்துப் பூசிக்கவும்.

உ

# அருள் பெறும் வழி

—: ○ :—

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி அலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே.

— தேவாரம் - அப்பர்.

நினைவதும் வாய்மை மொழிவதும் அல்லால்
கனைகழல் ஈசனைக் காண அரிதாம்;
கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்(டு) அருள்புரி யாநிற்கும்;
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே.

— திருமந்திரம்.

ஆனந்தா அச்சகம், திருச்சி-2. (போன்: 4642)